வாயுவும் அழகையுடைய ஆகாசமும் சந்திரனும் சூரியனும் ஆன்மாவும் ஆயினவராகியுமிருக்கின்ற பரமசிவனுடைய,—காதல் அழகு ஆய் - குமாரராகிய முருகக்கடவுளினது திருவுருவத்தைத் தியானி;—அங்கு அலை அதிரும் செந்திலாய் என்க - அவ்விடத்தே சமுத்திரம் ஒலிக்கின்ற திருச்செந்தூரையுடையவரோ என்று சொல்லு;—கன்றல் நெஞ்சே - வருந்தாதொழி என் மனமே. எ-று. என்மனமே இயமன் வருங் காலத்திலே வருந்தாதொழி முருகக்கடவுளினது திருவுருவத்தைத் தியானி திருச்செந்தூரையுடையவரே என்று சொல்லு எனக் கூட்டுக. சரீராந்தியத்திலே மனமானது எப்பொருளிலே சிந்தனை வைத்ததோ அப்பொருளே கைகூடும் என்பது சாஸ்திரசித்தம் ஆதலால், இப்படி உணர்த்தியருளினார். எக்காலத்திலும் இடைவிடாமல் வைத்த சிந்தனை எதுவோ அதுவே சரீராந்தியத்திலும் வருவது ஆகையால், முருகக்கடவுளைத் தியானித்தலை எக்காலத்திலும் இடைவிடாது செய்தாலொழியச் சரீராந்தியத்திலே செய்தல் கூடாது எனவும் அதனால் எப்பொழுதும் தியானிக்கவேண்டும் எனவும் அறிந்துகொள்க. (௱)

திருச்செந்தினிரோட்டகயமகவந்தாதியுரை

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

# பழமலையந்தாதி.

---

## காப்பு.

சீரதங்கோட்டுமுனிகேட்டநூற்படிசெங்கரும்பா
லேரதங்கோட்டுவயல்சூழ்முதுகுன்றிறையவனைப்
பூரதங்கோட்டுமலையானைப்பாடப்புரந்தருளும்
பாரதங்கோட்டுநுதியாலெழுதியபண்ணவனே.

---

திருவருந்தங்கவருங்கல்விமாதுசிறப்புவருங்
கருவருந்தங்கநிலையாதென்றுள்ளங்கரைந்திறைஞ்சிற்
பொருவருந்தங்கமலைபோலுங்குன்றைப்புராதனனை
யிருவருந்தங்கடலையாலிறைஞ்சுமிறைவனையே. (௧)

இறைக்குவளையுமிளங்கிள்ளையுமழகென்பவர்சேர்
துறைக்குவளையுமெகினமும்வாவிக்குத்தூயவிதழ்
நறைக்குவளையுமழகாமுதுகிரிநாதர்க்கின்றிப்
பிறைக்குவளையுமுடல்வந்தவாறென்கொல்பேசுகவே. (௨)

பேசுகவீரவருநாளென்றெல்லைப்பெருங்கடல்சே
ராசுகவீரபழமலைவாணவென்றன்பளைந்து
பூசுகவீரமதிவேணிநீற்றைப்புலவிர்பிறர்
காசுகவீரவனையுகவீர்மெய்க்கதிதருமே. (௩.)

கதியிலைவேலைமடவார்க்கியற்றக்கருதுளமே
பொதியிலைவேலையுண்டிற்றென்றெழும்பழம்பூதரத்தை
துதியிலைவேலைமகிழ்வீரன்றந்தையைநோக்கிலைநீ
யொதியிலைவேலைவளர்ப்பாய்தருவையொடித்தெறிந்தே. (௪)

ஓடியமருங்குலைக்கொங்கைகள்வாட்டுறுமோடரிக்கட்
டொடியமருங்குலைக்காந்தளங்கைம்மகள்சோரமதன்
கடியமருங்குலைத்தீப்போன்மதியங்கனன்றெழுத
லடியமருங்குலைச்செய்ம்முதுகுன்றர்க்கறைகுவமே. (௫)

மேருக்குவடுங்கர்தோட்பழமலைமேவுதிருத்
தேருக்குவடுவசமாடுமாடத்தெருவினிற்போய்
நீருக்குவடுவிழியெழின்மாய்ந்தெதிர்நின்றுநம
தாருக்குவடுவிளைத்தனளேயின்றெழுிவறவே. (௬)

ஒழியாக்கவலையொழிவதென்றேசொல்லுழல்புலத்தின்
வழியாக்கவலையிடைப்படுமானின்மயங்கிநின்று
பழியாக்கவலைமனமேபணிந்துபரவிலைவேல்
விழியாக்கவலைமகளிறைதாழ்பழவெற்பினையே. (௭)

வெற்றிக்குமாரனையீன்றபழமலைவேந்தனின்னு
முற்றிக்குமாரனைநோக்குங்கொலோவென்பர்முலைவம்புச்
சொற்றிக்குமாரனைவார்மடவாரவன்றேண்முலையோ
டொற்றிக்குமாரனையோன்முனஞ்சேரவுழலுவரே. (௮)

உழவரைச்சந்தவிளவாளைபாய்வயலோங்குகுன்றைக்
கிழவரைச்சந்ததமுகினைவாய்நற்கிளைவளரும்
பழவரைச்சந்தநறுந்தழைவாங்கிப்பாவினடு
ளெழவரைச்சந்தமயிலியல்பூசவுமெண்ணினளே. (௯)

எண்ணிவருந்தினநொந்தோம்பழமலையெய்திலர்கா
ணண்ணிவருந்தினமின்றேயினிக்கதிர்நற்புரவி
மண்ணிவருந்தினமாவாலெழுந்துகள்வந்துடலின்
கண்ணிவருந்தினவான்மதிறேய்க்குங்கடிநகரே. (௧௦)

கடிக்கஞ்சமனையுவந்துலகாக்குறுங்காரணனோர்
முடிக்கஞ்சமனைதொறும்பலியேற்றமுதுகிரியான்
மிடிக்கஞ்சமனைவருந்தொழவாழ்வம்விரவுறுமெங்
குடிக்கஞ்சமனைவெருவுதலேயின்றுகொல்வனென்றே. (௧௧)

கொல்லைக்குறவரைவாயனையார்கரிக்கோட்டைவிளை
நெல்லைக்குறவரையாதுகொள்காளத்திநேயனாவான்
றில்லைக்குறவரைநம்முதுகுன்றரைச்சேர்வலென்றா
ரெல்லைக்குறவரைமாத்திரைக்கேநலமீகுவரோ. (௧௨)

ஈகையிலங்கைதவமுளமெங்ஙனமெய்துவமென்
றோகையிலங்கைவடிவேலொடுவருந்தோன்றறங்கை
வாகையிலங்கையரசிறவூன்றியவள்ளன்மழு
மாகையிலங்கைம்முகமுதுகுன்றன்மலர்ப்பதமே. (௧௩)

பதம்பரவைக்குவருந்துபிராற்குப் பசுமயின்மேற்
கதம்பரவைக்குவரச்சூற்றுகட்செவிக்கங்கணற்குச்
சிதம்பரவைக்குமுதுகுன்றவாணற்குச்செல்வமெல்லா
மதம்பரவைக்குநிகர்கரித்தோறலைமாலைகளே. (௧௪)

மாலைக்கலுழனையோனெனத்தாங்கவயங்குமரு
ணூலைக்கலுழவொழியெனுமேற்றிவர்நோன்மையமூழ்
பாலைக்கலுழவொருமகற்கீந்தபழமலையான்
மூலைக்கலுழநடம்புரிவானெம்முதற்றெய்வமே. (௧௫)

தெய்வசிகாமணியேமணிகூடலிற்சென்றுவிற்ற
மெய்வசிகாமணிகண்டாபழமலைவித்தகமீ
னெய்வசிகாமணிமாவெனுங்கண்ணியைநெஞ்சகத்து
வைவசிகாமணினோவாதெனையின்பவாழ்வளித்தே. (௧௬)

வாழுமரிக்குமடநெஞ்சமேமென்மலர்ப்பசுழி
தாழமரிக்குமதற்காய்ந்ததந்தையுந்தாயுமொரு
வேழமரிக்குமிகவுறவாம்பழவெற்பினையல்
சூழமரிக்குமியல்பையெஞ்ஞான்றுந்துணிந்திலையே. (௧௭)

தந்துமியும்பரியம்பும்பழமலைசூழ்ந்துளாயீர்
நந்துமியும்பரியாவினையைவேண்டியுண்ணேம்புலவீர்
சிந்துமியும்பரிவாலுதவார்த்துதிசெய்விர்மல
முந்துமியும்பரிபாகமுண்டோசொல்லுமுங்களுக்கே. (௧௮)

கேட்டுப்புவனங்கொளவுமெண்ணேமெய்க்கிராதனின்முன்
னூட்டுப்புவனம்பயின்மான்றசையுண்டநாதனராய்
பூட்டுப்புவனங்கொளுமெய்ப்பழமலைப்புண்ணியன்றன்
வேட்டுப்புவனம்பதினான்குநல்கினும்வேண்டிலமே. (௧௯)

வேண்டவடுக்கநினைவதுன்றண்மலர்வேட்கைமணி
பூண்டவடுக்கணறுநுதலார்மயல்போக்குவது
நீண்டவடுக்கனயமாதிளமுலைநேர்ந்துதவ
மாண்டவடுக்கணிகர்தோட்பழமலைமன்னவனே. (௨௦)

மன்னவமாதவனும்பழமலைவாணமணி
யன்னவமாதவனன்மலைக்காற்கலைசந்தமதிகண்
டென்னவமாதவனல்லின்வந்தானென்றிரங்கிமதன்
றின்னவமாதவம்நாமேயென்செல்வத்திருந்திழையே. (௨௧)

திருந்தியவேதம்புகல்பரிசேயறஞ்செய்துடலம்
வருந்தியவேதம்பொருளெனவாழ்பழமாமலையான்
பொருந்தியவேதந்தருநஞ்சணனைனிற்பூமலர்கா
மருந்தியவேதம்புயமனையாட்கணிமங்கலமே. (௨௨)

மங்கலமாவிமலைசேர்பழமலைவாணமணிச்
செங்கலமாவிமலர்க்கைக்குருகொடுசெல்கவெமர்க்
கிங்கலமாவிவளைநீயணைந்ததினியுனெதிர்
தங்கலமாவிதரிற்கொடுசேறுமெந்தண்மனைக்கே. (௨௩)

தண்டங்கமண்டலங்கொண்டுபழமலைச்சங்கரதாட்
புண்டங்கமண்டலங்கண்டுசென்றாலுமெய்ப்போதமுறார்
பண்டங்கமண்டலங்காரமின்னாக்கினன்பாட்டியலைக்
கொண்டங்கமண்டலம்பாழாக்கியவுனைக்கூறலரோ. (௨௪)

கூற்றைக்கொடியங்கடப்பானருளெனக்கூய்ப்பரவி
யேற்றைக்கொடியங்கரஞ்சேர்பழமலையீசனணி
நீற்றைக்கொடியங்குளமேவெறுத்திறைபெருந்
தூற்றைக்கொடியங்கினமோடருந்துமுடம்பினையே. (௨௫)

உடற்குவலையந்தகன்கைக்கயிறென்றுணர்ந்துளமே
கடற்குவலையம்புகழ்சேர்முதுகிரிக்கண்ணுதற்கு
மடற்குவலையம்புனைகளத்தாற்குநம்மன்றமர்ந்த
நடற்குவலையம்பணியாமவற்கன்புநண்ணுகவே. (௨௬)

நட்டுவனாயறிகிலன்றண்ணுமைநந்திநின்று
கொட்டுவனாயிரைதேர்கயமுதுகுன்றுடையாய்
தட்டுவனாயகலாதநான்முகன்றாளமுயர்
குட்டுவனாவனைவான்பரவுநின்கூத்தினுக்கே. (௨௭)

கூத்துகந்தம்பலமேவுறுமோர்முதுகுன்றனைநம்
பாத்துகந்தம்பலமாரினுமெள்ளினும்பண்பனைத்தாள்
சாத்துகந்தம்பலமாமறையாற்புகழ்தாணுவைநா
மேத்துகந்தம்பலமார்பொதுமாதனையெள்ளினமே. (௨௮)

எள்ளாதவனையெலும்பாபழமலையென்றிருந்த
கள்ளாதவனைமகவரிந்தாக்கெனக்கட்டுரைத்து
விள்ளாதவனைமகிழ்பரமாவழல்வெண்மதியைத்
தள்ளாதவனைமுடிசூடெம்மாறுதருக்குதற்கே. (௨௯)

திருவினிலையினிமன்னவற்கில்லையித்தண்புனத்தின்
மருவினிலையினிமைக்கூற்றெனக்கந்திவாளாதிக
ருருவினிலையினியல்வேற்குகனையுதவியகோன்
கருவினிலையினிகந்தோன்பழமலைக்காரிகையே. (௩0)

காரிகையார்க்குவரும்பொதுவோவல்லகாண்விசும்பிற்
பூரிகையார்க்குமுதுகுன்றநாயகன்பொங்குமருள்
வாரிகையார்க்குமருந்தனையான்மலைமன்னனரு
ஞரிகையார்க்குமெழுவுறழ்தோட்கணறுநுதலே. (௩௧)

நுதலரிக்கும்பருவங்குறையென்றவனோக்கடையா
முதலரிக்கும்பருமேத்துந்தமிழர்முருகுபெரு
குதலரிக்கும்பருகற்கருங்காமுதுகுன்றரிலார்
சிதலரிக்கும்பருமாமரம்போற்றுயர்தின்பவரே. (௩௨)

தின்னக்கனியைவிழைகூனிளமந்திதீங்கனியீ
தென்னக்கனியையிரவியிற்பாய்பொழிலீண்டுகுன்றை
நன்னக்கலினையமதிவேணியனித்தநாம்பயந்த
சின்னக்கனியைவலத்தில்வைத்தால்வருந்தீங்கென்னையே. (

தீங்குதிரைக்கடனேர்நரர்காடியர்செய்மலத்திற்
காங்குதிரைக்கடநாய்க்கிரையென்றிந்தவாகமய
னீங்குதிரைக்கடநன்முதுகுன்றர்க்கங்கம்பனுக்கு
வாங்குதிரைக்கடனீயவல்லார்க்குவணங்குமினே. (௩௪)

வணங்கக்கரமுமொழியப்பழமலைமன்னுருவா
யிணங்கக்கரமுமிருப்பவைத்தேபுணரேந்திழையார்
பிணங்கக்கரமுஞமலியும்போலவர்பின்றொடர்வி
ரணங்கக்கரமுதலைபோலுமைப்பற்றுமந்தகனே. (௰௫)

அந்தரங்கங்கைதவரறியாமல்முதருள்சம்
பந்தரங்கங்கைவலிபோன்மின்னுக்கினர்பாடியுனைச்
செந்தரங்கங்கைரவமொண்கமலந்திரைத்துவருஞ்
சுந்தரங்கங்கைவிரும்புமுத்தாறுடைத்தொன்மலையே. (௰௬)

மலங்கலையங்கலைகற்றேன்றனக்கருள்வாழ்வளிப்போன்
கலங்கலையங்கலைநல்லோர்பரவுங்கழலடியான்
விலங்கலையங்கலைவேலோன்பிதாமுதுவெற்பிடத்திற்
பொலங்கலையங்கலையான்மூடுமீனைப்புதைத்தவனே. (௰௭)

புதைத்துக்கரக்கும்பொருளாளர்வெஞ்சொற்பொருமறலி
கதைத்துக்கரக்குங்குமமுலைபாகன்மெய்க்கண்டடியார்
பதைத்துக்கரக்குஞ்சிறிதாவுருகும்பழமலையான்
வதைத்துக்கரக்குஞ்சரமீர்ந்தவன்றரும்வாழ்விலரே. (௰௮)

இலங்குமரியுமருள்கோன்முதுவெற்பிடத்துரற்கால்
விலங்குமரியுமுழலலெல்லாமுன்னிவெய்துயிராக்
கலங்குமரியுமிருந்துயர்கூருங்கலுழ்ந்திடுந்தாய்க்
குலங்குமரியுமொருவனும்போகுங்கொடுஞ்சுரத்தே. (௰௯)

கொடுவரியானையடர்ந்துறுமாறெனக்கொண்டுயர்து
ஞெடுவரியானையுறவடிட்போமென்றொருங்குவந்தே
யடுவரியானைநிகர்நமன்றூதரடிமுடிமன்
னடுவரியானைமுதுகுன்றொடேசுநரார்தமையே. (௨௦)

நரகாவலர்மடவார்க்குள்ளுருக்கிக்கைந்நாவிருப்ப
வரகாவலர்புனைந்துன்றனையேத்திலராய்ந்தறிவா
ஓரகாவலரெனவுய்ந்தாரினமுளமுற்றகுன்றைப்
புரகாவலரிலருட்கோயிலாகும்புராந்தகனே. (௪௧)

புரந்தரனஞ்சுபழமலைவாணன்புலவர்தொழுந்
துரந்தரனஞ்சுதலைநாககங்கணன்றெண்டிறுமா
நிரந்தரநஞ்சுதொழுதேத்துதாதர்க்குநேயமொடு
வரந்தரநஞ்சுகளத்துவைத்தானென்பர்மாதவரே. (௪௨)

மாதனைக்கொன்றுவரம்மேனிவைத்தவமாசுணத்தை
யீதனைக்கொன்றுசிறுநாணென்றார்க்குமெழிலுடையாய்
நீதனைக்கொன்றுநலஞ்செயல்வேண்டுநினையிகழும்
வாதனைக்கொன்றுமுதுகுன்றமாநகர்மாசொழித்தே. (௪௩)

மாசியதிகந்துறந்தார்மகிழ்குன்றைமாநகரோ
ஞாசியதிகங்கொலோவென்பிராயினக்காசியெனப்
பேசியதிகந்தகன்றிருந்தான்பரன்பேரடலை
பூசியதிகம்பரனீங்கிலாணிப்புரியினையே. (௪௪)

புரிசடையாளபழமலைவாணபொருப்பெடுத்த
கரிசடையாளதிகந்தீர்த்தருளக்கடுவயின்ற
பரிசடையாளமுடையாயொழித்தனள்பட்டினையத்
துரிசடையாளதழுக்காமெனுநின்றுகிலினுக்கே. (௪௫)

அகிலங்குருகுந்துறந்தாளுயிருந்துறக்கநின்று
ளகிலங்குருகுமணிமுடியாயெனுமத்தவனை
முகிலங்குருகுமடியாய்பரந்தமுதுகிரியாஞ்
சகிலங்குருதலமேத்திறைவாமைத்தடங்கண்ணியே. (௪௬)

நடுக்கமலத்தினெடுங்குதல்போலநின்றாளிலுறு
மொடுக்கமலத்தினிகழ்வால்வளையினமூர்ந்திடச்சேன்
மடுக்கமலத்திலுகள்வயல்சூழ்குன்றைமாநகரோ
யடுக்கமலத்திபுனையலங்காரவருளுகவே. (௪௭)

அருவரைவில்லையுமிழ்மணிநாகமுமத்திகளு
முருவரைவில்லையெனப்பூண்பவரையவ்வும்பர்தொழும்
பொருவரைவில்லையுறமுதுகுன்றரைப்போந்துமரு
ளொருவரைவில்லைவரிலொற்றிவையெனவுற்றனமே. (௪௮)

உற்கைக்குமாறுபடுமணிநாகமொளித்துலவி
விற்கைக்குமாறுசுமந்தவசீர்முதுவெற்பினின்பா
னிற்கைக்குமாறுவழுவாநடக்கைக்குநேரிழையார்
சொற்கைக்குமாறுந்தமியேனுக்கென்றுதுணைசெய்வையே. ()

செய்க்குத்தனங்கமலமலர்சிர்தருஞ்செய்யதிரு
மெய்க்குத்தனங்கடரவடுவாங்கிதொல்வெற்பிடத்திற்
கைக்குத்தனங்கவொழியினுந்தாடனைக்காய்வதிலேன்
வைக்குத்தனங்களழித்திறையாதிந்தவையகமே. (௫௦)

வைத்துமதிக்குமருங்கிற்கைத்தாயெனமந்தரமத்
துய்த்துமதிக்குமனையின்மையான்மறையோதிமமுன்
னெய்த்துமதிக்குமுடிமிசைக்கங்கையையேற்றினையோ
மெய்த்துமதிக்குமணுகவொண்ணாமுதுவெற்பினனே. (௫௧)

வெற்புக்குமையவடிவேலெறிந்தசெவ்வேண்மதவேள்
பொற்புக்குமையவனோடரன்வாழ்முதுபூதரத்தி
னிற்புக்குமையவளொத்திருந்தாள்குறைவின்றிவளர்
கற்புக்குமையவள்போலுநுங்காதற்கருங்கண்ணியே. (௫௨)

கருந்தடங்கட்குமுதவாய்மயிலெங்கள்கண்களுக்கு
விருந்தடங்கட்குநலமெனப்போந்தவிண்மீன்பொரியு
மருந்தடங்கட்குவளையோடையாகுகவம்புயங்கள்
பெருந்தடங்கட்குமுகமோதுங்குன்றைப்பெருந்தகையே (௫௩)

பெருமுதலைவளையான்போற்றுங்குன்றைப்பெருந்தகையை
யிருமுதலைவளைமூப்படைந்தாண்டவற்கின்மகவைக்
கருமுதலைவளைவாயிற்றந்தானைமுன்கண்டழுது
பொருமுதலைவளைநீத்தனண்மேவினள்பூங்கொடியே. (௫௪)

பூங்குமிழும்படிமுள்ளும்பொருந்திப்புளிஞர்பொருள்
வாங்குமிழும்படிமோதுமெனல்கொடுமால்விழுங்கி
யாங்குமிழும்படிவந்தவெம்பாலையடைந்தவள்கால்
வேங்குமிழும்படினென்னும்பழமலைவித்தகனே. (௫௫)

வித்துருமத்தைநிகர்வானுயிர்செய்வினையருத்துங்
கத்துருமத்தையிடுதயிர்போலக்கலங்குமதன்
சத்துருமத்தைவனைமுதுகுன்றிறைதாள்கொடுவா
னத்துருமத்தையிலவாகவெள்ளுவர்நற்றவரே. (௫௬)

நற்றவராகமறையவராகவிந்நானிலத்தி
லற்றவராகமனமுடையார்க்கன்றியச்சமற
வுற்றவராகமறியாதொளித்தநின்றெண்பதங்கள்
பற்றவராகமலாலயன்போற்றும்பழமலையே. (௫௭)

பழங்கவிகடமகமந்திக்கீபொழிற்பண்டைமறை
முழங்கவிகடவுளர்க்கீயுங்குன்றைமுதல்வனைவே
ளழங்கவிகடவிழிதிறந்தானையடிபரவார்
கிழங்கவிகடமறவரிற்றோன்றிக்கெடுவர்களே. (௫௮)

கெடுத்துப்பணியுமுடையும்வெள்ளாமற்கிழத்திமுலை
வடுத்துப்பணியுமுரம்வேட்டுநின்றனள்வல்லியத [லாங்
ளுடுத்துப்பணியுமரைக்கசைத்தோய்தொண்டருள்ளமெல்
கொடுத்துப்பணியுமலர்த்தாட்டிருமுதுகுன்றத்தனே. (௫௯)

குன்றுகளுங்களையொவ்வாவெனுமுலைக்குன்றதிர்க்குஞ்
சென்றுகளுங்களையுண்வண்டுமோவில்செழுங்கொன்றைமா
கன்றுகளுங்களைநன்மதிவேணிக்கடவுடனை [ன்
யென்றுகளுங்களையெம்மானைக்குன்றையிறைவனையே. (௬௦)

இறவாதவாநந்தவெள்ளத்தழுத்தியெனையருளாற்
றுறவாதவாநந்தவாள்வதென்றேமெய்த்துறவர்தொழு
மறவாதவாநந்தனஞ்சூழ்முதுகுன்றடைந்தவர்த
முறவாதவாநந்தகோபாலனென்றற்குடையவனே. (௬௧)

உடையமடங்கலுதைத்தபொற்பாதவொளிசெய்மழுப்
படையமடங்கன்முகற்காய்ந்தவீரபழமலையாய்
கடையமடங்கல்லொடுபகலுந்தொழக்கற்றிலமெம்
விடையமடங்கல்வருவதெஞ்ஞான்றுவிளம்புகவே. (௬௨)

விளங்கவலம்புரிமால்போற்றுநன்முதுவெற்பகஞ்சேர்ந்
துளங்கவலம்புரியாய்மாய்பிறிதொருடம்படையாய்
துளங்கவலம்புரிமென்குழன்மாதர்க்குச்சூழ்ந்துநின்று
களங்கவலம்புரியிவ்வெற்பையேநிலைகைவருமே. (௬௩)

வருந்தாதவரைவளைத்திட்டவபவவன்பிணிக்கு
மருந்தாதவரைமருவும்பழமலைவாணவுனைப்
பொருந்தாதவரையுயிர்செகுத்துண்ணம்புலிமழுங்கத்
திருந்தாதவரைவரக்கூவுறுதென்சேவல்களே. (௬௪)

சேவாலங்காட்டுபொழுதகஞ்சாயச்செலுத்திவரி
மாவாலங்காட்டுமுதுகிரிவாணவவ்வானமுய்ய
வேவாலங்காட்டுமிடற்றாயநின்சீர்த்திவிரித்துரையா
காவாலங்காட்டுவிலங்காயினேனிந்தஞாலத்தே. (சுரு)

நிலங்கடந்தானைமகிழ்வானைத்தன்னடிநின்றொடுங்கும்
புலங்கடந்தானைமுதுகுன்றவாணனைப்போற்றிலர்தந்
நலங்கடந்தானைமுழுதுமிழந்தநகரினிற்போ
யிலங்கடந்தானைதுணிசீரையாக்கொண்டிரப்பர்களே. (சுசு)

இரப்பாரிலாரையிலரெனின்வைவரிரந்திடற்குங்
கரப்பாரிலாரைமுகநோக்குறார்மழுக்கைக்குன்றையா
யுரப்பாரிலாரையுறவாகக்கொள்வர்தம்முள்ளனபோய்
நிரப்பாரிலாரையவிப்பார்தம்மக்களைநீத்திருந்தே. (சுஎ)

இருப்புவலியையகன்றுபொன்வல்லியையெண்ணுதலாம்
விருப்புவலியைமுலையாரணங்கினர்விண்ணுறுதல்
பொருப்புவலியையிடத்தில்வைத்தாய்மலர்ப்பூங்கணைசேர்
கருப்புவலியையொழித்தாய்பழமலைக்கண்ணுதலே. (சுஅ)

கண்டந்தரிக்கும்விடத்தார்பழமலைக்கண்ணுதலார்
பண்டந்தரிக்குமருங்களித்தார்தம்பழவடியா
ரெண்டந்தரிக்குமரிதாகும்பாதரிருங்கருமா
வெண்டந்தரிக்குமதற்காய்ந்தவரெனுமெல்லியலே. (சுகூ)

மெல்லவணங்குநினைவாலெதிர்ந்திடவேனெடுங்க
ணல்லவணங்குவளையுடையோடுநடந்திலைநீ
கொல்லவணங்குமதிசுமந்தேநின்றகொள்கையென்னே
வெல்லவணங்குமலையாய்முதுகிரிவேதியனே. (எ0)

வேதியவாவிதனக்காவியாகியவித்தகபெண்
பாதியவாவிமலர்த்தேன்பெருகும்பழமலைவாழ்
சோதியவாவிவருவிடைப்பாகநின்றொண்டருறு
நீதியவாவியவரையென்றேசென்றுநேர்குவனே. (௭௧)

நேருமடியர்தமக்குறவாமவர்கேசமறச்
சோருமடியர்தமையணுகாதவர்தம்பியினாற்
சாருமடியர்மணிநிறவண்ணன்றரையிடந்து
தேருமடியர்முதுகுன்றவாணுதற்றீக்கண்ணரே. (௭௨)

கண்டரவந்தனைநேர்ந்தாங்கருகக்களிற்றினைமுன்
கொண்டரவந்தனைவானோர்செயுமுதுகுன்றனொடு
வண்டரவந்தனைநேர்வாளைக்கோலம்மதனனெய்யும்
புண்டரவந்தனைசேர்தியென்றோதுமின்போமின்களே. (௭௩)

போதுமின்மாலைவகைவகையாகவும்பொற்றொடியீ
ரோதுமின்மாலைதரின்வம்மினில்லையென்றோட்டினரேன்
மாதுமின்மாலைவருமுனஞ்சாமென்றுவண்கைமலர்
மோதுமின்மாலைமகிழ்குன்றைவாணர்தம்முன்னடைந்தே. ()

முன்னஞ்சிலம்புசிலையாக்கியநன்முதுகிரியாய்
பொன்னஞ்சிலம்புசிலம்புதலோடையிற்பூஞ்சிறக
ரன்னஞ்சிலம்புடையிளமானையனங்கனெய்து
தன்னஞ்சிலம்புகுவனையல்லாதுதணந்தனனே. (௭௫)

தணந்தவளக்கரிமேனியளாங்கொல்வெண்சங்கினங்கண்
மணந்தவளக்கரினின்றழுமோவலவாவுயிர்க
ளுணந்தவளக்கரிதாமுதுகுன்றரோங்கமர
கணந்தவளக்கரியானேத்திறையன்றிக்காப்பிலையே. (௭௬)

காப்புக்கரியுந்திருமகணாயகன்காப்பவற்றின்
பூப்புக்கரியுந்தலையுடையானும்பொருந்தவைத்தான்
மாப்புக்கரியுங்குயிலும்பயில்பொழில்வண்டில்லையான்
மூப்புக்கரியும்புலியுங்கொன்றீர்ந்தமுதுகுன்றனே. (எஎ)

முதுமறையந்தமுறுபொருளோநன்முழுப்பணிக்கு
விதுமறையந்தமுடியாய்புராணம்விளங்கிரண்டொன்
பதுமறையந்தமுதுகுன்றவாணநின்பாதம்வணங்
குதுமறையந்தகனைமார்பிலெம்மைக்குறுகிடினே. (எஅ)

குறுகுமுனிவனையன்றுண்டவிம்முதுகுன்றனுக்கு
மறுகுமுனிவனைசெய்தாலுய்வாரெவர்வந்தருளென்
றறுகுமுனிவனைபோதுமிடார்நமனார்முனிவு
முறுகுமுனிவனையெய்தாரறிவறுமூடரினே. (எகூ)

மூடாநமாதிமிரையடைந்தாயலென்முன்னணுகன்
மீடாநமாதிபெருமானுதைக்கினுமெய்ப்புகழைப்
பாடாநமாதியெழுத்தைந்துமோதிப்பழமலைவாழ்
வீடாநமாதியடியாரடியருண்மேவினமே. (அ0)

மேவத்தகரையிவர்மகவீன்றதொல்வெற்பரச
சேவத்தகரைவொடுபூசித்துனைவிண்செல்வமுறும்
பூவத்தகரைநகுவேமெமக்குநின்பொங்கருளா
லோவத்தகரைவகைப்பாசமுந்தம்முரங்குலைந்தே. (அக)

குலையாநிலமும்விசும்புந்தொழுமுதுகுன்றமதிக்
கலையாநிலமும்மடியழல்சாயவக்காய்கனலின்
மலையாநிலமுமுடன்கூடவேமெனைவாங்குகழைச்
சிலையாநிலமுமெமதில்லமாய்நின்றுசீறுவனே. (அஉ)

சீறிரையாகமதியுணும்பாம்பணிசெல்வமறை
மாறிரையாகமலிமுதுகுன்றமருவுதற்குச்
சேறிரையாகயிலாசவிலாசசுதேவவென்மின்
றோறிரையாகநிலையென்றுவாழன்மின்றொண்டர்களே. (அ௩)

தொண்டரைக்கூடல்விழையார்பொழின்மலர்த்தூளுதிர்த்த
விண்டரைக்கூடலறவுறல்போலுந்தொல்வெற்புறுமைக் [ல்
கண்டரைக்கூடலுடையாரைப்போற்றிலர்கற்றறியா
மிண்டரைக்கூடல்வழியேநடத்துபுவீழ்த்துவரே. (அ௪)

வீழிவலஞ்சுழிதில்லைசிராப்பளிவேதவனங்
காழிவலஞ்சுழியன்மேவுகுன்றைக்கடவுள்விடி
னாழிவலஞ்சுழிவெள்வளையானையன்னகல்விப்
பாழிவலஞ்சுழியுந்தியுள்வாங்குவர்பாவைநடோ. (அ௫)

பாவலருக்குமலிபொருளீந்துகொள்பாட்டினர்க்கு
மேவலருக்குமழுவார்க்குநன்முதுவெற்பினுக்குக்
காவலருக்குமயலாகிநின்றுகலங்குகின்றா
யாவலருக்குவிளைநிலமாயினையாயிழையே. (அ௬)

ஆயக்கலையகலுஞ்சீர்முதுகுன்றரசமுனஞ்
சாயக்கலையனிமிர்த்தசெம்மேனியதப்பலில்லா
னேயக்கலையபுழுக்கூடெனுமுடனேயமெல்லா
மாயக்கலையமலமாயைகன்மங்கள்வந்தருளே. (அ௭)

வந்திக்கநாவினினையேவழுத்தமலர்விழியான்
முந்திக்கனாவிதொலைத்தோய்நினதுமுதுவெற்பையே
சிந்திக்கநாவிமதநாறுமாதரைச்சேருமின்ப
நந்திக்கனாவினொழிவாமென்றுன்னுறநல்குதியே. (அ௮)

நல்குரவேநல்லுரைதான்முதுகுன்றர்காட்டுனக்குச்
சொல்குரவேநல்குரவுறுவேலதொடைகள்பல
மல்குரவேனவிதண்விட்டகம்புக்கமாளையிந்த
வொல்குரவேனல்லிடைக்கொடுபோகலென்றேதிலையே. (

ஓதித்திருக்குமொழிவதல்லாமலுன்னுண்மைநிலை
சாதித்திருக்குமியல்புதந்தாயிலைதன்மையெல்லாம்
போதித்திருக்குமொழிகுன்றைவாணபொருப்புநவுஞ்
சோதித்திருக்குமரிபாகசுந்தரன்றூதுவனே. (க௦

தூதுகண்டாலுமதியணிவேணியர்துன்னிவந்தென்
காதுகண்டாலுமுடன்மூக்கின்பெய்தநல்காரொனவெம்
மாதுகண்டாலுமுவக்கப்படுமொழிவந்தனள்கார்ப்
போதுகண்டாலுமயில்வாழ்பொழிற்பழம்பூதரனே. (க௧

பூதரனன்றுசிலைக்கென்றுகொள்ளும்புராந்தகனார்
சீதரனன்றுபொழிலெனுங்குன்றைத்திருநகரார்
காதரனன்றும்விழிபெறுமாறுடைக்கண்ணுதலார்
மாதரனன்றுவருமதிக்கோய்தலைமாற்றிலரே. (க௨

மாற்குச்சிவந்தமலர்த்தாண்முதுகிரிவாணன்மறை
நூற்குச்சிவந்தவிராப்பொருளென்பவர்நோக்குளான்வேள்
கோற்குச்சிவந்தவிறலாளனின்னுங்குறுகிலனிம்
மேற்குச்சிவந்ததறியேனிவட்குவிளைவதுவே. (க௩

விளையவளையுமணிநெல்லயன்முதுவெற்பிறைவ
னளையவளையுமுறவுடையானவ்வணங்கசிலை
வளையவளையுமுடையுந்துறந்துவருந்துமிவ்
விளையவளையுமொருபுடைசாரவிருத்திலனே. (க௪

இருத்தவிருப்பதிடத்திலல்லாமலிருப்பலென
நிருத்தவிருப்பமுதுகுன்றவாணனைநீவலியுஞ்
செருத்தவிருப்பவுததியையாருணச்சிந்தைசெய்வர்
திருத்தவிருப்பவலையாவர்மெல்லுவர்தேமொழியே. (கரு)

தேவியுமானும்விளையாடிடமுடைச்செங்கணுத
லாவியுமானும்வருஞ்சீர்முதுகுன்றணிவிழவைக்
காவியுமானும்விழியாய்கண்டெய்தெனக்கண்மறுகி
னேவியுமானும்மகட்கிடர்நீர்செய்திரோழையயோ. (கசு)

ஏடலையாறுகிழித்தெதிரோறவிண்ணேறுபுகழ்க்
கூடலையாறுபுலியூர்மகிழ்முதுகுன்றர்பெற்ற
வேடலையாறுமுயிர்த்தெடுத்தேந்துபுமென்கைகொடுத்
தாடலையாறுவருகவென்பார்நல்லுமைதனையே. (கஎ)

உமையிடப்பாகனலங்கூர்முதுகுன்றுடையனராச்
சுமையிடப்பாகவரிதேடடியுறத்தூமலர்க
டமையிடப்பாகமருவுவரோலவர்தங்களைப்பா
ரமையிடப்பாகனனுகானுதைநினைந்தஞ்சுவனே. (கஅ)

அஞ்சுவணத்தைவரான்முறையோதவரக்கெறிந்த
பஞ்சுவணத்தைமருவுமென்றாளுமைபாகமொடு
செஞ்சுவணத்தையணையநின்கோலமென்சிந்தையுற
விஞ்சுவணத்தைமகிழ்குன்றைவாணவிரும்புவனே. (ககூ)

விருத்தாசலாசங்கராமலைமாதுவிழிகளிக்கு
நிருத்தாசலசந்திரன்போலுடம்பிடைநின்றவர்தங்
கருத்தாசலசம்பவமிலர்க்காண்டறங்காட்டியசொற்
றிருத்தாசலசந்தமியேன்றலைக்குன்றிருவடியே. (௧00)

பழமலையந்தாதி முற்றிற்று.

பழமலைநாதர்

# பிக்ஷாடன நவமணிமாலை.

:o:

நங்குற்றந் தீர்க்கும் பழமலை நாதர்க்கு நற்பலிகொண்
டங்குற்று மென்றுகில் போக்கினள் வெற்றனை யாகியங்தோ
விங்குற் றனையென வெம்பெரு மானிவ் விருநிலத்திற்
றங்குற்றம் பார்க்கு மவருள ரோவெனத் தாழ்ந்தனளே. ()

குன்று முதுகுன் றுடையா னிலாதவெண் கோவணத்தான்
றன்று மரைக்கை விரன்மூன்று காட்டித் தனங்குறித்து
நன்றுக வித்தனை பிச்சையுண் டோசொன் னறுநுதலா
யென்று ளிரண்டத் தனையுள கோடியென் றிட்டனளே. (உ)

இப்பாத் திரந்தலை கீழாப் பிடித்தனை யென்னைமுனந்
தப்பாப் பலிகொண் டறிந்திலை யோவெனத் தாழ்குழலாள்
செப்பார் பணைமுலை யாய்நிலத் தேபலி சிந்தியிட்டா
யெப்பாத் திரத்திலு மிட்டறி யாய்கொன் முன்னென்றனளோ.

வெட்டன மாதுகை தாழ்த்திட மாமுது வெற்பர்பலி
யொட்டினை நீதொட லாமோ வெனவுமை யுந்தொடலாம்
வீட்டினில் யானென வேயவர் தாமிது வேண்டுவைகோல்
யாட்டினின் பாலென மூலமு மாமென்ப தென்றனரோ. (௩)

மாண்ட வெலும்பணி கோலமொ டேபலி வாங்கிடுதற்
கீண்டு வருமுது குன்றுடை யீருமை யான்மிடற்றி
னீண்ட வுகிருறத் தாதனை வேனென்று நீர்தலையைத்
தீண்ட வுமது பலிப்பாத் திரமென் சிரிக்கின்றதே. (௫)

வானோர் தொழுநின் பலிப்பாத் திரத்தை வனைந்ததுந்
தானோ வெனச்சக் கரந்தான் சுழற்றத் தகுங்குயத்தி
யானோர் குயவன்மெய் யென்றே முதுகுன் றிறையியம்ப
நானோ வொருசிற் றிடைச்சியென் றாளந் நறுநுதலே. (௬

பங்கய மன்ன விழியார் முதுகுன்றர் பாத்திரத்தி
லங்கையி லைய மொடுவண்டு வீழநல் கையவென
வெங்கையில் வந்த தெமதாக வேவழக் கென்றுசெட்டி
மங்கையர் தங்கட் கிருங்கூ டலிலிட வைத்தனரே. (௭

நீருக்குத் தக்க சடையார் முதுகுன்றர் தேடியுங்க
ளூருக்குட் பிச்சையென் றுற்றேமுண் டாயி னுமாமினைய
வாருக்குத் தக்க முலையா ரதற்குளர் மற்றொருவர்
யாருக்குக் கிட்டு மதுசோறு நீர்கொளு மென்றனரே. (௮

முழங்குந் துடியொடு பிச்சையென் றேமுது குன்றர்வரச்
சழங்கு முலைமுதி யாளொன் பலியெனத் தம்மனையில்
வழங்கு மனமென் றனர்புறம் போந்து வளர்முலையாள்
விழுங்குமனம்பகற்போதுகொள்வாயென் றுவேண்டினரே.

## சிறப்புப்பாயிரம்.

பிச்சா டனநவ ரத்தின மாலையைப் பீடுபெறத்
தைச்சான் றுறைமங் கலமுறை சிவ தயாபரனும்
பொய்ச்சார் பதனை யொழிக்குஞ் செழும்புலி யூர்ப்புனித
னற்சார்பு சார்ந்த சிவப்பிர காச நவமணியே.

முற்றுப்பெற்றது.

உ

# விருத்தகிரி

# பெரியநாயகியம்மை

## நெடுங்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முழுமணி மிடற்றன் களன்மழு வீரன் முக்கணண் டைகநின தெழில்கூர், முகம்புலர் தலைக்கண் டெல்வளைந் தடியின் முளைப்பிறைக் கோடுகொண் டெழுந்து, விழுமணி யரவ நுழைசடா டவியின் விண்ணதித் தண்புனல் விடுப்ப, விரைவொடு குளிர்ந்து முகமலர் தலைவன் மென்கொடி யெனநினை யுணர்ந்தோன், செழுமணி நீல மழைமுகி றவழுஞ் சிலம்பெனும் புற்றினின் றார்ந்து, திரைபொரு கடற்போர்ப் பெரும்படம் விரித்துத் தினமணி யெனப்படுஞ் செங்கேழ், கெழுமணி யுமிழ்ந்து பேரிரு டுரந்து கிடக்குமெய் முடக்குமா சுணமாய்க், கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா யகியே. (க)

விழைவொடு நினக்கு மாதுலன் மாமி வெற்புவேண் டுறுதன் மருகன், மேலெலா மெலும்புந் தோலுமாய்க் கிடத்தல் வெறுத்திடா திளமைநா டாது, பழமலை தனக்குச் சாதியொப் பெனவே பார்த்துனைக் கொடுத்தநின் றந்தைப், பனிமலை யென்றே தன்மனை யாட்டி பயந்திடப் பெருமக ளென்றே, கழைவரை முன்ன நேன்றுபு நடந்து கடிதுபள் ளங்களின் வீழ்ந்து, கரைகளின் மெல்ல வேறிவெண் ணுரைவாய்க் கடையுற வளைந்துருத் திரைந்து, கிழவுரு விருத்த நதியெனப் பட்டுக் கீர்த்திமூ வுலகினும் போர்ப்பக், கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா யகியே. (உ)

காமமென் கின்ற கதுவுவெவ் கியுங் கடுஞ்சின மெனப்படும் புலியுங்,களிப்பெனுஞ் சிறுகட் புகர்முகப் புழைக்கைக் கறையடிக் களிநல்யா னையுமே, தாமிகு மெனது மனமெனும் வனத்திற் றனிவரல் வெருவினே யாயிற்,றழலினின் ருடிப் புலிசரி யுரிபோர்த் தடுத்துவாண் டுணையொடும் வருவா, யீமவெள் ளெலும்பங் கிடப்படு மெனத்தா னெலும்பணி கடவுண் மா நதியா, யிருந்துநல் லன்னங் கொண்டுமெய் வெருப்ப விணைதபு கங்கையை யிகழ்ந்து, கீழ்மைசொல் கின்ற தொண்டுமின் ருயிற் கிடைக்குமோ விதன்குண மென்னக், கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா யகியே.(ரு)

சுட்டுதற் கரிய நின்னைமெய்ஞ் ஞான சொரூபியென் றருமறை யனைத்துஞ்,சொல்லுவ துண்மை யென்னநன் குணர்த்தேன் சுரந்தநின் றிருமுலைச் செழும்பால், வட்டிலிற் கொச்சைப் பிள்ளைமுன் னுண்டு வண்புகழ் ஞானசம் பந்த, வள்ளலென் றிடப்பேர் பெற்றரன் மொழிபோன் மையறீர் செய்யுள்செய் தமையா, லெட்டிநற் றிகிரி பறித்தெறிந் தாற்காலியானையை யுருட்டிவாங் குதிரை, யெறிந்துசங் கதிர்த்துக் கொடுமர முறித்திட் டெதிர்ந்திடார் தலைவிடுத் தோடிக், கிட்டினர்ப் புரட்டி முருகவேள் பூதக் கிளைப்பெரு வெள்ளமொத் தெழுந்து, கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா யகியே. (சு)

உள்ளமென் மனையில் விருப்பொடு வெறுப்பா முருகுறுமேடிக ணிரவி, யொழிவிலா வாய்மை மெழுக்கிறைப் பூசி யுயர்தரு மனமெனப் படுமோர், பள்ளிமென் றவிசி லிருத்திநின் பதியைப் பழுதில்யா னெனப்படு நெல்லைப், பழமல மா

யைத் தவிடுமி போக்கிப் பாகஞ்செய் தென்றருத் திடுவாய், தள்ளுமொண் மறிமான் முல்லையு ளாயர் சூழல்வெண் ணெய்க்குட முருட்டித், துணைமுலைக் குவட்டின் மஞ்சண்மேற் படப்போய்த் தோய்ந்துநின் றுடிளங் கயற்கட், கிள்ளைமென் மொழியார் துகிலெடுத் தொளித்துக் கேடில்சீர்க் கண்ணனு டுதல்போற், கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா யகியே. (ரு)

நாடிறு ருயிர்க ளாமெவற் றினுக்கு நல்கிய தந்தையுந் தாயு, நம்பனு நீயு மல்லிர்நும் மூர்க்கே நவின்றவம் முறையுளீர் நீவிர், பாடியா ரணஞ்சொ லீண்டுமாய் வனதாம் பரிந்துநீ மடிமிசைக் கிடத்தப், பழமலை தனது பெயர்வலக் காதிற் பகர்ந்தருள் செயப்பெறுஞ் செயலா, லோடியோர் காக மேறுபு கவிழ்த்த வொருசிறு கரகநீர் தானு, மொருவனோர் செவியால் விடுத்தவப் புனலு முமைபொரு பாசர்கட் டோன்றிச், கேடிலா னந்த வுருவமா மெனையொக் கின்றன வோவென வதிர்த்துக், கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா யகியே. (சு)

தன்னொரு மகன்வா கனத்தினை வெறுத்தோர் தனயன்வா கனத்தினை விரும்புந், தண்மணிப் பணியு மதனையுள் வெருவித் தான்வள ராமதி யமும்வாழ், மின்னவிர் சடையான் றனைநினை யன்றி மேவுவா னவரைநெஞ் சுன்னல், விரிகதிர் விழுங்கு மணியினை விடுத்து வெறுமணி கொள்ளுமா றன்றோ,மன்னவர் மனிதர் சந்திரன் பரிதி மகபதி மலரயன் மறலி, வானவர் வசுக்கள் சித்தர்கிம் புருடர் மாதவர் விஞ்சையராசுரர், கின்னர ருரகர் மூழ்குபே ரரவங் கேட்டொரு மு

ராரியாய் சுருட்டக், கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரி
யமர் பெரியநா யகியே. (௭)

படைத்திடுந் தொழிலோன் மறைச்சடங் கியற்றப் பாவி
யென் மனத்தினும் வலிய, பன்மணி குயின்ற செம்பொனம்
மியினின் பதமலர் வைத்தக லாம, விடத்தினி லுனைவைத் தரு
ளுநதன் முன்றே வியற்பகை மனைவியை யிரந்தா, னிளம்பி
றை சூடி யிறையவன் பின்ன ரெங்ஙனம் போயிரந் திடுவா
ன், கொடுத்தெனி லிடுபொன் புலவனுக் காரூர்க் குளத்தினிற்
பழமலை யன்று, கொடுத்தது நானே கொடுத்தன னென்னிற்
குளித்தகல் பவர்குளத் தெல்லாங், கிடைத்திட வொருசுன்
டருமெனக் கிதுசெய் கின்றதற் புதங்கொலோ வென்னக்,
கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா
யகியே. (௮)

பண்டுநின் கொழுநன் றந்தையுந் தாயும் பயந்ததன் னொரு
மருந் தன்ன, பாலனைக் கொன்று சமைத்திடக் கொள்ளும்
பாதகீ மொன்றுளங் கொண்டு, தொண்டர்தம் மனையிற் செ
ல்வனென் றெழுநின் சுதனழப் பொருதநின் முலைப்பால், சு
ரந்தமு தூட்டு மன்னனீ யாவாய் தொழுதுபோய்ப் பிரித்தி
லை யென்றே, வண்டார்தங் கங்கை யன்னமங் கதன்கணுடை
தன்னைவந் தடையா, வாடியிங் கிதன்க ணமர்வுறப் பெறலா
லடைந்தவான் கங்கையை யிகழ்ந்து, கெண்டையொண் வா
ளை யுடனெழக் குதிப்பக் கிளைவளைக் கமுகின்மேற் றவழக்,
கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா
யகியே. (௯)

புரிசடைக் காட்டு ளாடவிட் டிளவம் புலியினைச் சிறப்புலி யொடுகோட், புலிதொழ விருக்கு மொருபெருந் தெய்வப் புலியனி மலையிள மானைப், பரிவுறத் தொழுது மருவிய வதனாற் பயமறச் சாதிக டனது, பாங்கர்வந் தெய்தப் பெற்றதென் றறிந்து பசுவெலா மருவுறப் பெறுமே, சுரிகுழற் கயற்கட் பிறைநுதற் கனிவாய்த் துடியிடைக் குவிமுலைத் தளிர்க்கைத், துணைவிமுற் கங்கை பெயர்சொலக் கூசுஞ் சுடர்மணிக் கட்செவிப் பணியான், கிரிமகட் கடுத்த கறைமிடற் றிறைவன் கிளக்குமேற் புகழெனத் தோன்றிக், கிளர்மணி முத்த நதியுடை விருத்த கிரியமர் பெரியநா யகியே. (௧௦)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# பெரியநாயகியம்மைகலித்துறை.

---

இறைவற்குத் தக்க விருமாப் பெனுமொழி யின்றியொரு
மறுவற்ற தன்மனை யாட்கேற்ற தாமிரு மாப்பனெனக்
குறைவற்ற நெற்கொண் டுலகேற் றுணைப்பலி கொள்ளுமரன்
பெறவுற் றனையனை யேகுன்றை வாழும் பெரியம்மையே (௧)

பத்தர்க்கு நெஞ்ச மலர்மீ திருத்திப் பயந்துகொடுஞ்
சித்தர்க் ககலுநின் பாதாம் புயமொரு செஞ்சிலைமேல்
வைத்தற்குமெண்ணி மதியுடையேனென்பன் வார்சடையான்
பித்தர்க்குத் தங்குண நூலினுஞ் செம்மை பெரியம்மையே()

இழைபொறுத் தாற்பொறை தானென்ப ரானல் லிசைப்பு
லவர், மழைபொறுத் தார்புனன் முக்காற் பொறுக்கும் வழ
க்கதுண்டே, யுழைபொறுத் தார்நல் லியற்பகை யார்மனைக்
குற்றவொரு, பிழைபொறுத் தாய்நன்று காண்குன்றை வா
ழும் பெரியம்மையே. (ரு)
கையன்று தாமரை கண்ணன் றிருமென் கயலெனவே, பொ
ய்யன்றுகங்கையைநீயொன் றுசாதிப்பர்போர்விடையார், மெய்
யென்றுநீகொண்டிரோலறலாயினென்மென்கையிடைப், பெ
ய்யென்றுபின்னை யறிவாய்தென் குன்றைப்பெரியம்மையே.
பொன்வாங்கு செஞ்சடைப் பாம்புகள் சுற்றும் புதுமதியி
னன்வாங்கு கோடு கிழிக்கு நகுவெண் டலைபடுங்கன்
முன்வாங்கு மெந்தைநின் பாதாம் புயத்தின் முடிவணங்கிற்
பின்வாங்கி நில்லன்ன மேகுன்றை வாழும் பெரியம்மையே.
கடிநறு மென்றரு மீதிருப் பானெனக் கங்கையென்பாண்
முடிநடு வேறி யிருந்தனள் வேனின் முதிர்விலத
னடியடை வானெனச் சங்கரன் பாங்க ரமர்ந்தனை நீ
பிடிநடை யேகுயி லேகுன்றை வாழும் பெரியம்மையே. (கூ)
நின்போ லிலரரு ளாளரொன் றேசொல நின்கொழுந
னென்போ னொருவன் மகன்பூங் கழுத்தினை யீர்வலென்றே
யன்போர் சிறிது மிலனுகப் போக வதற்கிசைந்து
பின்போய்விடாதுகண்டாய்குன்றைவாழும்பெரியம்மையே.
செச்சை மலர்புரை வாரேறு மேனி திறந்துகொண்டு
கச்சை யரவொன் றசைத்துக் கபாலங் கரத்தெடுத்துப்
பச்சை மயிலனை யார்மனை தோறும் படர்ந்திரக்கும்[மையே.
பிச்சை யொழிகென் றொருவார்த்தை சொல்லெம் பெரியம்

சோதிப் பதியன்றி வேறொரு தெய்வந் தொழுதற்கில்லை
யோதிற் பிறரென வச்ச முறும லுயிர்களெல்லா
நீதிப் புதல்வர்க ளாயின வாதலி னீகொள்கற்புப்
பேதிப்பதன்றுகண்டாய்குன்றைவாழும்பெரியம்மையே (௯)

நின்னைய நாயக னென்றிருப் பாய்நினை நீத்தகன்று, தன்னேரில் பூவணத் தேயன்று போய்ச்செய்த தன்மையெலாஞ், சொன்னே னலேனினி நின்றே டொளிப்பதென் சொல்லுவ ன்யான்; பின்னே தெனக்குத் தருவாய்தென் குன்றைப் பெரியம்மையே. (௰)

நற்றவத் துன்னைப் பெறுமலைக் கென்னமுன் னல்கியுனைப்
பற்றுறக் கொண்ட தெலும்பே யணியும் பழமலைதான்
சற்றெனக் கையந் தராதுசொன் னும்மலைச் சாதியுள்ளே
பெற்றவர்க்கென்னமுலைவிலைகுன்றைப்பெரியம்மையே. (௧௧)

கற்று ரறிகுவர் மக்கடம் பேறெனக் கட்டுரைத்த
சொற்று ரொருபெண் ணொழித்ததென் பாரொடு தொல்லுலகி
னற்றுண் மகற்பெறு கென்றுசி சொல்பவர் நாணவுனைப்
பெற்றுன் மலையனா யன்குன்றை வாழும் பெரியம்மையே.()

கரிய மிடறுடைப் பெம்மான் கரத்துழைக் கன்றொடுமோ
ரரிய முடியம் புலியோடு மேவினை யாடுகின்றாய்
தெரிய வரிய பதிறு லுலகுமென் சிற்றிலென்பாய்
பெரியவ ளென்ப துனக்கேது குன்றைப் பெரியம்மையே. ()

தண்ணு ரிதழி புனைவான் விழியிணை தம்மனைகள்
பண்ணு வழிக்குமென் றோநின் றிருமுக பங்கயத்திற்
கண்ணு யினருனக் கவ்வலை மாதுங் கலைமகளும்
பெண்ணாரமுதனையாய்குன்றைவாழும்பெரியம்மையே. (௧௪)

உள்ளத் துறுபிணி யேற்கு மருந்துக்கென் றுன்னைவந்து
மெள்ளத் தொழவுந் திருமுலைப் பாண்மெல் விரனுதியாற்
றெள்ளித் துளியள வாயினுந் தொட்டுத் தெறித்திலையுன் [யே
பிள்ளைக்குங் கிள்ளைக்கும் பால்கொடுத் தாலென் பெரியம்மை

ஆறுத் துயர்கொண் டடியேன் சலிப்ப வதுசெவியி
லேறும லேயிருந் தாலென்செய் வேனெங்க ளீசற்கொரு
கூறுகி யண்ட முதலா யிளமை குலவுதவப்
பேறுகி வாழ்பவ ளேகுன்றை வாழும்பெரியம்மையே.(௧௬)

நனைமாட்சி மென்கொன்றைத் தாரோன் றருமிரு நாழிநெ
ல்லால், வினைமாட்சி கொண்டுயி ரெல்லா மளித்தருண் மேன்
மையினன், மனைமாட்சி யெய்து முனக்கே பெருங்கற்பு மா
ட்சியன்றிப், பினைமாட்சி யார்க்குண் டுலகீன்ற குன்றைப்
பெரியம்மையே. (௧௭)

நெடிய விலங்க லொருசிலை யாக்கிய நின்பதிமேற் [த
கொடிய வநங்கன் சிலையோ வெடுத்துமுன் கொண்டெதிர்ந்
வொடிவி லருஞ்சிலைச் செங்கரும் போசொல் லுனதுநடப்
பிடியு ளடங்கிய தென்னிது குன்றைப்பெரியம்மையே.(௧௮)

பண்டு வீணை யொடுபாட வந்தவப் பாமடந்தை
கண்டழு மாறு மதிநிரை போலக் கவின்கனியும்
வெண்டலை மாலை கிடந்தொளிர் தோளிக்கு வீங்குமுலைப்
பெண்டகை மாமணி நீகுன்றை வாழும் பெரியம்மையே. ()

முற்றிற்று.

# நன்னெறி.

:O:

## காப்பு.

மின்னெறி சடாமுடி விநாயக னடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.

என்று முகம னியம்பா தவர்கண்ணுஞ்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர் - துன்றுசுவை
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழ்வோ
நாவிற் குதவு நயந்து. (௧)

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற வின்சொற் பிறிதென்க - வீசற்கு
நல்லோ னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு. (௨)

தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவராற் றாங்கொள்க - தங்கநெடுங்
குன்றினாற் செய்தனைய கொங்கையா யாவின்பால்
கன்றினாற் கொள்ப கறந்து. (௩)

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும் - பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. (௪)

நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலு
நோக்கி னவர்பெருமை நொய்தாகும் - பூக்குழலாய்
நெல்லி னுமிசிறிது நீங்கிப் பழமைபோற்
புல்லினுந் திண்மைநிலை போம். (௫)

காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே - யோதுகலை
யெண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கருன்
கண்ணிரண்டு மொன்றையே காண். (௬)

கடலே யனையம்யாங் கல்வியா லென்று
மடலே றனையசெருக் காழ்த்தி - விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்ணப் படும். (௭)

உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க - வெள்ளந்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு. (௮)

மெலியோர் வலிய விரவலரா யஞ்சார்
வலியோர் தமைத்தா மருவிற் - பலியேல்
கடவு ளவிர்சடைமேற் கட்செவியஞ் சாதே
படர்சிறைப் புள்ளரசைப் பார்த்து. (௯)

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர் - திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகி
னிறையிருளை நீக்குமே யின்று. (௧௦)

பொய்ப்புலன்க ளைந்துநோய் புல்லியர்பா லன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாம் - துப்பிற்
சுழற்றுங்கொல் கற்றூணைச் சூறா வளிபோய்ச்
சுழற்றுஞ் சிறுபுன் றுரும்பு. (௧௧)

வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துத லூனே புதுமை - திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு. (கஉ)

பெருக்க மொடுசுருக்கம் பெற்றபொருட் கேற்ப
விருப்ப மொடுகொடுப்பர் மேலோர் - சுரக்கு
மலையளவு நின்றமுலை மாதே மதியின்
கலையளவு நின்ற கதிர். (கஙு)

தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோ மென்று
தலையா யவர்செருக்குச் சார்த - விலையா
விரைக்கும்வண் டூதுமல ரீர்ங்கோதாய் மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு. (கச)

இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யு - நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூ றெரியும்
விழியிலார்க் கேது விளக்கு. (கரு)

தம்மையுந் தங்க டலைமையையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர் - தம்மி
னிழியினுஞ் செல்வ ரிடர்தீர்ப்ப ரல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல். (கசு)

எந்தைநல் கூர்ந்தா னிரப்பார்க்கீ தென்றவன்
மைந்தர்தம் மீகை மறுப்பரோ - பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா வரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி. (கஎ)

இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே - பொன்செ
யதிர்வளையாய் பொங்கா தழற்கதிராற் றண்ணென்
கதிர்வரவாற் பொங்குங் கடல். (௧௮)

நல்லோர் வரவா னகைமுகங்கொண் டின்புறீஇ
யல்லோர் வரவா னழுங்குவார் - வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர. (௧௯)

பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ள
மெரியி னிழுதாவ ரென்க - தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண். (௨0)

எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்து
மெழுத்தறிவார்க் காணி னிலையா - மெழுத்தறிவா
ராயுங் கடவு ளவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை. (௨௧)

ஆக்கு மறிவா னலது பிறப்பினான்
மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க - நீக்கு
பவரா ரரவின் பருமணிகண் டென்றுங்
கவரார் கடலின் கடு. (௨௨)

பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்ற
றிகழ்ச்சி தருநெஞ்சத் திட்ப - நெகிழ்ச்சி
பெறும்பூரிக் கின்றமுலைப் பேதாய் பலகா
லெறும்பூரக் கற்குழியு மே. (௨௩)

உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே - வண்டுமலர்ச்
சேக்கை விரும்புஞ் செழும்பொழில்வாய் வேம்பன்றோ
காக்கை விரும்புங் கனி. (உச)

கல்லா வறிவிற் கயவர்பாற் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகன நண்ணாரே - வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள். (உரு)

உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார் - மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதான்
விண்ணளவா யிற்றோ விளம்பு. (உசா)

கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மா லியலுதவி தாஞ்செய்வ - ரம்மா
முளைக்கு மெயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதா மென்று. (உஎ)

முனிவினு நல்குவர் மூதறிஞ ருள்ளக்
கனிவினு நல்கார் கயவர் - நனிவிளைவிற்
காயினு மாகுங் கதலிதா னெட்டிபழுத்
தாயினு மாமோ வறை. (உஅ)

உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோ
ரடுக்கு மொருகோடி யாக - நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியா யஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான். (உகூ)

கொள்ளுங் கொடுங்கூற்றங் கொல்வான் குறுகுதன்மு
னுள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே - வெள்ளம்
வருவதற்கு முன்ன ரணைகோலி வையார்
பெருகுதற்க ணென்செய்வார் பேசு. (௧௦)

பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார் - நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேற்
கைசென்று தாங்குங் கடிது. (௧௧)

பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னு மறங்கள் வலியிலவே - நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான். (௧௨)

எள்ளா திருப்ப விழிஞர்போற் றற்குரியர்
விள்ளா வறிஞரது வேண்டாரோ - தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல். (௧௩)

அறிவுடையா ரன்றி யதுபெறார் தம்பாற்
செறிபழியை யஞ்சார் சிறிதும் - பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே யன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு. (௧௪)

கற்ற வறிவினரைக் காமுறுவர் மேன்மக்கண்
மற்றையர்தா மென்று மதியாரோ - வெற்றிநெடு
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம். (௧௫)

தக்கார்க்கே யீவர் தகார்க்களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோ - ரெக்காலு
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய். (௩௬)

பெரியார்முற் றன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழுந் - தெரியாய்கொல்
பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து. (௩௭)

நல்லார் செயுங்கேண்மை நாடோறு நன்றாகு
மல்லார் செயுங்கேண்மை யாகாதே - நல்லாய்கேள்
காய்முற்றிற் றின்றீங் கனியா மிளந்தளிர்நாள்
போய்முற்றி னென்னாகிப் போம். (௩௮)

கற்றறியார் செய்யுங் கடிநட்புந் தாங்கூடி
யுற்றுழியுந் தீமைநிகழ் வுள்ளதே - பொற்றொடீ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
வன்றே மணமுடைய தாம். (௩௯)

பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத்தா மற்றெவ்வார் - மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக்
காணுங்கண் ணொக்குமோ காண். (௪0)

நன்னெறி முற்றிற்று.

---

சிவப்பிரகாசசுவாமிகள் திருவடிவாழ்க.

# பிரசித்தபத்திரம்.

:o:

சிவப்பிரகாசசுவாமிகள், வேலையசுவாமிகள், கருணைப் பிரகாசசுவாமிகள் என்னும் மூவராலும் அருளிச்செய்யப் பட்ட (௪௩) பிரபந்தங்களுக்குள், திருவெங்கையலங்காரம், க்ஷேத்திரவெண்பா, சிவநாமமகிமை, யேசுமத நிராகரணம், பழமலைநாதர் கொச்சகக்கலிப்பா, அதிசயப்பத்து, வேலைய சுவாமிகள் கைத்தலமாலை, மயிலத்து இரட்டைமணிமாலை, பாரிசாதலீலை, குகைநமச்சிவாயலீலை, வீரசிங்காதனபுராணம் என்னும் பதினொன்றும் அகப்படவில்லை: மற்றைப் பிரபந்தங்கள் அச்சிடப்பட்டு வருகின்றன: இவற்றுள், திருவெங்கைக்கலம்பகம், திருவெங்கையுலா, சிவப்பிரகாசவிகாசம், சதமணிமாலை, தருக்கபரிபாஷை, மயிலத்துலா, இஷ்டலிங்கவகவல் என்னும் ஏழு பிரபந்தங்களுக்குமாத்திரம் இன்னும் இரண்டுமூன்று பிரதிகள் வேண்டியிருக்கின்றன: ஆகலின், இப்பிரபந்தங்களில் ஏதேனும் கிடைக்கப்பெற்றுள்ளவர்கள் அனுப்புவார்களாயின் மிகவும் பேருபகாரமாகும். இதுவிஷயத்தில் புகழ்புண்ணியங்களையேயன்றிப் பொருளைவிரும்பினும் இயன்றவளவு உபகரிக்கலாம். இங்ஙனம்,

சென்னபட்டணம் முத்தியாலுபேட்டை தம்புசெட்டியார்வீதியில் மேலண்டைவாடை 130-வது நெம்பர் வீடு

☞ கா - ஞானசுந்தரஐயர்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪௩ | ௧௧ | புடைவார் | புடையவார் |
| ௭௭ | ௪௫ | கோல் | கொல் |

உ

கணபதிதுணை.

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மையபாளையம்

ஸ்ரீசிவஞானபாலையதேசிகாதீனத்து

நல்லாற்றூர் அல்லது துறைமங்கலம்

சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# பழமலையந்தாதி.

இஃது,

ஷை ஆதீனத்துச் சிதம்பரம்

## இராமலிங்கசுவாமிகளால்

திருத்தமாகப் புதுக்கப்பட்ட உரையோடு,

தண்டையார்பேடு

க. வ. திருவேங்கடநாயுடுவால்

சென்னை:

ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விய௵ ஆனி௴.

கணபதிதுணை.

# பழமலயந்தாதியுரை.

## காப்பு.

சீரதங்கோட்டுமுனிகேட்டநூற்படிசெங்கரும்பா
லேரதங்கோட்டுவயல்சூழ்முதுகுன்றிறையவனைப்
பூரதங்கோட்டுமலையானைப்பாடப்புரந்தருளும்
பாரதங்கோட்டுநுதியாலெழுதியபண்ணவனே.

(இதன்பொருள்.) பாரதம் கோட்டு நுதியால் எழுதிய பண்ணவன் - (ஐந்தாம்வேதமென்னும்) பாரதகதையைத் (தனது) கொம்பு நுனியாகிய எழுத்தாணிக்கூரினால் (மேருமலையென்னும் ஏட்டில் சிலாசாதனமாக) எழுதிவைத்த விநாயகக்கடவுள்,— செங்கரும்பால் ஏர் ஓட்டு வயல் சூழ் முதுகுன்று இறையவனை - (பள்ளர்கள்) சிவந்த கரும்பாகிய தாற்றுக்கோலினால் உழும்பகட்டை (அடித்து) நடத்துகின்ற கழனிகள் புடைவளைந்த பழமலையென்னும் தலத்தில்வாழும் தலைவரும்—பூ ரதம் கோட்டும் மலையானை-பூமியாகிய இரதத்தையும்வில்லாகவளைத்த மேருமலையையும் உடையவருமாகிய சிவபெருமானை— சீர் அதங்கோட்டுமுனி கேட்ட நூற்படி பாட-(உலகத்திலே) சீர்த்திபெற்ற அதங்கோட்டு மகாமுனிவரால் கேட்கப்பட்டு விளங்கும் தொல்காப்பிய இலக்கணப்படியே (யான் தமிழினாலே) துதித்தற்கு,— புரந்தருளும்-இடையூறு வாராமற் காத்தருளுவர். என்றவாறு. அது பகுதிப்பொருள் விகுதி. அங்கு அசை.

திருவருந்தங்கவருங்கல்விமாதுசிறப்புவருங்
கருவருந்தங்கநிலையாதென்றுள்ளங்கரைந்திறைஞ்சிற்
பொருவருந்தங்கமலைபோலுங்குன்றைப்புராதனனை
யிருவருந்தங்கடலையாலிறைஞ்சுமிறைவனையே.

(இ-ள்.) பொருவரும் தங்கமலை போலும் குன்றை புராதனனை— ஒப்பில்லாத மேருமலையைப்போலும் (உயர்ச்சிபெற்ற) பழமலைநாதரும்—இருவரும் தங்கள் தலையால் இறைஞ்சும் இறைவனை - பிரமவிட்டுணுக்களாகிய இருவரும் தங்களுடைய சிரங்களால் வணங்கும் முதல்வருமாகிய சிவபெருமானை,—கரு வருந்து அங்கம் நிலையாது என்று உள்ளம் கரைந்து இறைஞ்சில் - கருப்பாசயத்திலே துன்பத்தையடைந்துபிறக்கும் இச்சரீரம் நிலையல்லவென்றறிந்து, மனமுருகி வணங்கினால்,—திரு தங்க வரும் - சீதேவி தங்கும்படி வந்து சேர்வள்;—கல்வி மாது தங்க வரும் - கலைமகளும் தங்கும்படி வந்து சேர்வள்;—சிறப்பு தங்க வரும் - முத்தியும் நிலைபெற வந்து சித்திக்கும். எ-று. தங்க என்பது இடைநிலைத்தீபகமாக வினையிடங்களிலும் கூட்டப்பட்டது. பழமலைநாதரை வணங்கில், இம்மையிலே கல்வி செல்வங்களேயன்றி தேகாந்தியத்திலே முத்தியுஞ் சித்திக்குமென்பது கருத்து. (க)

இறைக்குவளையுமிளங்கிள்ளையுமழகென்பவர்சேர்
துறைக்குவளையுமெகினமும்வாவிக்குத்தூயவிதழ்
நறைக்குவளையுமழகாமுதுகிரிநாதர்க்கின்றிப்
பிறைக்குவளையுமுடல்வந்தவாறென்சொல்பேசுகவே.

(இ-ள்.) இறைக்கு வளையும் இளம் கிள்ளையும் அழகு என்பவர் சேர் - கைகளுக்கு வளையலும் இளமையாகிய கிளிப்பிள்ளையும் அழ

ளாகும் என்று சொல்லப்பட்ட மகளிர்கள் சேர்ந்து விளையாடா நின்ற—துறைக்கு வளையும் எகினமும் - மணிமுத்தநதித் துறைகளுக்குச் சங்குகளும் அன்னங்களும்—வாவிக்கு தூய இதழ் நறை குவளையும் அழகு ஆம் - தடாகங்களுக்குத் தூய்மையாகிய மடலையுடைய தேன்பொருந்திய செங்கழுநீரும் அழகாக அமைந்திருக்கின்ற—முதுகிரிநாதர்க்கு வளையும் உடல் இன்றி - பழமலைநாதராகிய இவ்விருத்தருக்குக் கூனியவுடலம் இல்லாமல்,—பிறைக்கு வந்த ஆறு என் பேசுக-(இந்த) இளம்பிறைக்கு (கூனியவுடலம்)வந்தகாரணம் யாது? சொல்வீராக. எ-று. [இது பழமலைநாதர் பவனிவரக்கண்டு மால்கொண்டுநின்ற மகளிர் ஒருவரையொருவர் வினவியது.] இறை கைவிரலின் சிற்று. அது கையை யுணர்த்தலின் ஆகுபெயர். என்பவர் என்பதில் செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் படுவிகுதி தொக்கது. சொல் அசைநிலை. (உ)

பேசுகவீரவருநாளென்றெல்லைப்பெருங்கடல்சே
ராசுகவீரபழமலைவாணவென்றன்பளைந்து
பூசுகவீரமதிவேணிநீற்றைப்புலவிர்பிறர்
காசுகவீரவனையுகவீர்மெய்க்கதிதருமே.

(இ-ள்.) புலவிர் - புலவர்களே,—ஈர வருநாள் என்று - (இயமன் வாளினால்) அரிய வருங்காலம் (இதுவே) என்று கருதி,—பெருங்கடல் சேர் ஆசுக - பெரிய பாற்கடலினிடத்தே தங்கிய பாணத்தையுடையவரே,—வீர - வீரரே,—பழமலை வாண - முதுகுன்றத்தில் வாழ்பவரே,—என்று ஒல்லை பேசுக - என்று விரையத் துதிப்பீராக.—ஈர மதி வேணி நீற்றை அன்பு அளைந்து பூசுக - குளிர்ச்சியையுடைய சந்திரனைத்தரித்த சடைமுடியையுடையவரது விபூதியை அன்போடு கலந்து தரிப்பீராக,—பிறர் காசு உகவீர் அவனை உக

வீர் மெய் கதி தரும் - பிறர்பொருளை விரும்பாது அக்கடவுளை விரும்புவீராகில் (அக்கடவுள் உங்களுக்கு) உண்மையாகிய மோட்சத்தைத் தந்தருளுவார். எ-று. இயமன் வருங்காலம் இதுவெனத் துணியப்படாமையின் சாவருநாளென்று ஒல்லைப்பேசுக என்றார். உகவீர் என்னும் வினைமுற்றுக்களுள் முன்னையது எச்சப்பொருள்பயந்து எதிர்மறையினும் பின்னையது உடன்பாட்டினும்வந்தன. (௩)

கதியிலைவேலைமடவார்க்கியற்றக்கருதுளமே
பொதியிலைவேலையுண்டுற்றோன்றொழும்பழம்பூதரத்தை
நதியிலைவேலைமகிழ்வீரன்றந்தையைநோக்கிலைநீ
யொதியிலைவேலைவளர்ப்பாய்தருவையொடித்தெறிந்தே.

(இ-ள்.) நுதியில் ஐ வேலை மகிழ் வீரன் தந்தையை - நுனியிலே நுண்மைவாய்ந்த வேலாயுதத்தை விரும்பிக் கரத்திலேதரித்த வீரத்தையுடைய முருகக்கடவுளது பிதாவும்—வேலை உண்டு பொதியிலை உற்றோன் தொழும் பழம்பூதரத்தை நோக்கிலை - சமுத்திரநீரை உழுந்தளவாக்கியுறிஞ்சிப் பொதியமலையை யடைந்து வீற்றிருக்கின்ற அகத்தியமகாமுனிவர் வணங்கும் பழமலைநாதருமாகிய சிவபெருமானைத் தரிசித்தலையுஞ்செய்யாது—மடவார்க்கு வேலை இயற்ற கருது உளமே - மாதர்களுக்கு ஏவற்பணிகளை (இடைவிடாது) புரியச் சிந்தித்தொழுகும் என்மனமே,— நீ தருவை ஒடித்து எறிந்து ஒதி இலை வேலை வளர்ப்பாய் - நீ (பயன்படும்) கற்பகத்தருவை முறித்தெறிந்துவிட்டு (பயன்படாத) ஒதியமரத்தையும் இலைகளையுடைய வேலமரத்தையும் வைத்து வளர்ப்பாய் போலும்:—கதியிலை - (நீ இங்ஙனம் உழலுதலால் நினக்கு யாதொரு) கதியும் இல்லை. எ-று. நோக்கிலை முற்றெச்சம். உதி ஒதியென

மருவிற்று. வேனிற்காலத்திலே ஒருவரும் வெய்யிற்கொதுங்காவண்ணம் ஒதி இலைகளையுதிர்த்து வெறுமையாய் நிற்றலானும், வேல் இலைகளையுடைத்தாயிருப்பினும் கீழே இடமின்றி முட்களையுதிர்த்து நிற்றலானும், பயனின்மை நோக்கி, ஒதியிலைவேலை வளர்ப்பாயென்றார்.()

ஒடியமருங்குலைக்கொங்கைகள்வாட்டுறுமோடரிக்கட்
டொடியமருங்குலைக்காந்தளங்கைம்மகள்சோரமதன்
கடியமருங்குலைத்தீப்போன்மதியங்கனன்றெழுத
லடியமருங்குலைச்செய்ம்முதுகுன்றர்க்கறைகுவமே.

(இ-ள்.) ஒடிய மருங்குலை வாட்டுறும் கொங்கைகள் ஓடு அரிக்கண் - ஒடியும்படி இடையை வருத்துகின்ற (பருத்த) தனங்களையும் பரவிய செவ்வரிகளையுடைய கண்களையும்—தொடி அமரும் குலை காந்தள் அம் கை மகள் சோர - வளையல்பொருந்திய கொத்தாகிய காந்தள்மலர்போலும் அழகிய கைகளையுமுடைய என்மகள் சோர்வடையும்படி,—மதன் கடிய மருங்கு உலை தீப்போல் மதியம் கனன்று எழுதல் - மன்மதன் (பாணங்களையேவி ஓர்பக்கத்திலேநின்று) வருத்த மற்றொருபக்கத்தில் கொல்லுலைத்தீப்போல் சந்திரன் சுவாலையைவீசிக்கொண்டு எழுதலை,—அடியம் அரும் குலை செய் முதுகுன்றர்க்கு அறைகுவம் - அடியேங்கள் அரிய கரைகளையுடைய வயல்சூழ்ந்த பழமலைநாதருக்குச் சொல்லுவேம், எ-று. [நற்றாய்பாங்கியரோடுரைத்தல்.] (ரு)

மேருக்குவடுசிகர்தோட்பழமலைமேவுதிருத்
தேருக்குவடுவசமாடமாடத்தெருவினிற்போய்
நீருக்குவடுவிழியெழின்மாய்ந்தெதிர்நின்றுநம
ராருக்குவடுவிளைத்தனளேயின்றொழிவறவே.

(இ-ள்.) மேரு குவடு நிகர் தோள் பழமலை மேவு திரு தேருக்கு - மேருமலையை ஒத்த புயங்களையுடைய பழமலைநாதர் எழுந்தருளிவராநின்ற அழகிய இரதத்தைத் தரிசித்தற்கு,—உவள் துவசம் ஆடும் மாடம் தெருவினில் போய்-இந்தப்பெண் சிறுகொடிகள் அசையாநின்ற மாளிகைசெறிந்த வீதியின்வழியே சென்று,—வடு விழி நீர் உக்கு எழில் மாய்ந்து எதிர் நின்று - மாவடுவின் பிளப்பையொத்த கண்களினின்றும் நீரைச்சொரிந்து அழகழிந்து (விரகத்தோடு அத்தேரின்)முன்னேநின்று,— நமது ஊருக்கு ஒழிவற இன்று வடு விளைத்தனள் - (வசையற்ற) நம்முடைய நகரத்திலுள்ள மடந்தையர்க்கு (எக்காலத்திலும்) நீங்காவண்ணம் இற்றைப்பொழுது வசையை உண்டாக்கினள். எ-று. [தேர்வரவுகண்ட மகளிர் திகைப்புணர்த்தியது] ஊர் அதிலுள்ளாரையுணர்த்தலின் ஆகுபெயர். (கூ)

ஒழியாக்கவலையொழிவதென்றோசொல்லுழல்புலத்தின்
வழியாக்கவலையிடைப்படுமானின்மயங்கிநின்று
பழியாக்கவலைமனமேபணிந்துபரவிலைவேல்
விழியாக்கவலைமகளிறைதாழ்பழவெற்பினையே.

(இ-ள்.) மனமே - நெஞ்சே,—வேல் விழி ஆக்கம் அலைமகள் இறை தாழ் பழவெற்பினை பணிந்து பரவிலை-வேல்போலும் கண்களையும் செல்வத்தையுமுடைய இலக்குமிக்கு நாயகராகிய விஷ்ணுமூர்த்திவணங்கும் பழமலைநாதனை வணங்கித் துதித்தாயில்லை;— வலையிடை படும் மானின் மயங்கி நின்று - வலையினிடத்தே அகப்பட்ட மான்போல மயக்கமுற்றுநின்று,—உழல் புலத்தின் வழி யாக்க பழி ஆக்க வல்லை - சுழன்றுதிரியும் ஐம்புலவழியிலே என்னைக் கட்டவும் எனக்குப் பழியை உண்டாக்கவுமே வல்லாய்:—ஒழியாக் கவலை ஒழி

வது என்றோ சொல் - (நீ இங்ஙனமிருக்கில் யாம் எக்காலத்தும்) நீங்காத விதனத்தை நீங்குவது என்னாளோ சொல்வாயாக. எ-று. (எ)

வெற்றிக்குமாரனையீன்றபழமலைவேந்தனின்னு
முற்றிக்குமாரனைநோக்குங்கொலோவென்பர்மூலைவம்புச்
சொற்றிக்குமாரநைவார்மடவாரவன்றோண்முலையோ
டொற்றிக்குமாரனையோன்முனஞ்சேரவுழலுவரே.

(இ-ள்.) மடவார் - பெண்கள்,—வெற்றி குமாரனை ஈன்ற பழமலை வேந்தன் இன்னும் முற்று இக்குமாரனை நோக்குமோ என்பர் - சயம்பொருந்திய முருகக்கடவுளைப் புதல்வனாகப் பெற்ற பழமலைநாதர் இன்னும் ஒருமுறை முதிர்ந்த கருப்புவில்லையுடைய மன்மதனை எரியும்படி பார்த்தருளுவரோ! என்று சொல்லுவர்;—மூலை வம்புச் சொல் திக்கும் ஆர நைவார் - அந்தரங்கத்திலே இரகசியமாகப்பேசிய புதிய களவொழுக்கவார்த்தைகள் எட்டுத்திக்கிலும் பரவலால் (அவைகேட்டு) வாடுவர்;—அவன் தோள் முலையோடு ஒற்றிக்குமார் அணையோன் முனம் சேர உழலுவர் - அப்பழமலைநாதருடைய புயங்களைத் தமது முலைகளுடன் அணைத்துக்கொள்ளும்படி அவர்முன்னே செல்லுதற்கு உழன்று திரிவர். எ-று. [இது வீதிமடவார் விரகங்கூறியது.] கொல் அசை. ஆர என்பது வினையெச்சத்திரிபு. மார் ஈறு "மார்வினையொடு முடிமே" என்னும் விதிப்படி உழல்வார் என்பதனோடு முடிந்தது. இது ஏனை முற்றுக்கள்போல ஓரோவிடங்களில் எச்சப்பொருள் பயப்பினும் முற்றெனக்கொள்ளுதலே ஆன்றோர்வழக்கு. (அ)

உழவாரச்சந்தவிளவாளையாய்வயலோங்குகுன்றைக்
கிழவாரச்சந்ததமுநினைவாய்நற்கிளைவளரும்

பழவளைச்சந்தநறுந்தழைவாங்கிப்பரவினடு
ளெழவளைச்சந்தமயிலியல்பூசவுமெண்ணினளே.

(இ-ள்.) அந்த மயில் இயல்-அந்த மயில்போலுஞ் சாயலையுடையவள்,—நல் கிளை வளரும் பழவளை நறும் சந்தம் தழை வாங்கி பரவினள்-நல்ல மூங்கில்கள் வளராநின்ற பழமலையினின்றும் நீ கொய்துவந்த வாசனைபொருந்திய சந்தனத்தழையை (என்கையினின்றும் தன்கையிலே) ஏற்று வணங்கித் துதித்தாள்;—தூள் எழ அளைச்சு பூசவும் எண்ணினள்-அதனைத் துகளெழும்படி அளைத்து மேனியிலே பூசிக்கொள்ளவும் நினைத்தாள்; (ஆகையால்),—உழவளை சந்தம் இள வாளை பாய் வயல் ஓங்கு குன்றை கிழவனை சந்ததமும் நினைவாய் - பள்ளர்களை அழகிய இளமையாகிய வாளைகள் பாய்ந்து திரியப்பட்ட கழனிகள் சூழ்ந்த பழமலைநாதனை எப்போதும் நினைப்பாயாக. எ-று. நினைக்கில் நின்கருத்து எளிதில் முடியும் என்பது எஞ்சிநின்றது. [தலைவி கையுறையேற்றமை பாங்கி தலைவற்குரைத்தல்.]

எண்ணிவருந்தினநொந்தோம்பழமலையெய்திலர்கா
ணண்ணிவருந்தினமின்றேயினிக்கதிர்நற்புரவி
மண்ணிவருந்தினமாவாலெழூந்துகள்வந்துடலின்
கண்ணிவருந்தினவான்மதிறேய்க்குங்கடிநகரே.

(இ-ள்.) பழமலை எய்து இலர் எண்ணி வருந்தினம் - (பெண்ணே,) பழமலையினிடத்தே பொருந்திய வீட்டையுடையவராகிய நம்மிறைவர் (என்று வருவரோ! என மனதிலே,) நினைத்து வருத்தப்பட்டோம்;—நொந்தோம் - விரகநோய்கொண்டு மெலிந்தோம்;—மண் இவர் உந்தின மாவால் எழும் துகள் வந்து உடலின்கண் இவரும் தினவால் - (இப்பொழுது) பூமியின்கண்ணே அத்தலைவரால் செ

ஊர்தப்பட்ட குதிரைக்குளம்பால் எழுகின்ற தூளிகள் (ஆகாயத்தில்) வந்து சரீரத்தினிடத்திலே படிதலாலுண்டாகிய தினவினால்,— கதிர் நல் புரவி கடி நகர் மதில் தேய்க்கும்-சூரியனுடைய நல்ல குதிரையானது காவலையுடைய நமது நகரத்தினது (வானளாவிய) மதிற்புறத்திலே உரோஞ்சிக்கொள்கின்றது; (ஆகையால்),—கான் நண்ணி வரும் தினம் இன்றே இனி - காட்டுவழியே பொருந்திவருகின்ற தினம் இத்தினமே; இனிக் கவலற்க. எ - று. [பாங்கி தலைமகன் வரவு தலைவிக்குணர்த்தல்.] கவலற்க என்பது சொல்லெச்சம். (கo)

கடிக்கஞ்சமனையுவந்துலகாக்குறுங்காரணனோர்
முடிக்கஞ்சமனைதொறும்பலியேற்றமுதுகிரியான்
மிடிக்கஞ்சமனைவருந்தொழவாழ்வம்விரவுறுமெங்
குடிக்கஞ்சமனைவெருவுதலேயின்றுகொல்வனென்றே.

(இ-ள்.) கடி கஞ்சம் மன் ஐ உலகு உவந்து ஆக்குறும் காரணன் - வாசனைபொருந்திய தாமரைப்பூவில் நிலைபெற்ற கடவுளாகியும் உலகங்களை மகிழ்ந்துபடைக்கும் தலைவனாகியுமிருக்கின்ற பிரமதேவனுடைய—ஓர் முடி கஞ்சம் மனைதொறும் பலி ஏற்ற முதுகிரியான் - ஓர்தலையாகிய வெண்கலப்பாத்திரத்திலே (தாருகாவனத்து முனிபத்தினிகளுடைய) வீடுகடோறுஞ்சென்று பிச்சையேற்ற பழமலைநாதரானவர் — விரவுறும் எம் குடிக்கு கொல்வன் என்று அம் சமனை வெருவுதலே இன்று - கலந்து அடிமைகொண்ட எமது குலத்துள்ளார்க்கும், கொல்லவருவானென்று அழகிய இயமனுக்கு எப்போதும்) அஞ்சுதலே இல்லை;—மிடிக்கு அஞ்சம்- தரித்திரத்துக்கும் பயப்படோம்;—அனைவரும் தொழ வாழ்வம் - எவ்வுலகத்தவரும் வணங்கவும் வாழ்வோம். எ-று. கஞ்சம் பாத்திரத்தை யுணர்

த்தலின் ஆகுபெயர். மிடிக்கும் தொழவும் குடிக்கும் என்னும் உம்மைகள் விகாரத்தாற்றொக்கன. குடி அதிலுள்ளாரையுணர்த்தலின் ஆகுபெயர். சமனை வேற்றுமைமயக்கம். (௧௧)

கொல்லைக்குறவரைவாயனையார்கரிக்கோட்டைவினை
செல்லைக்குறவரையாதுகொள்காளத்திநேயராவான்
றில்லைக்குறவரைநம்முதுகுன்றரைச்சேர்வலென்றூ
ரெல்லைக்குறவரைமாத்திரைக்கேநலமீகுவரே.

(இ-ள்.) குறவரை வாய் அனையார் - வேடர்களைத் (தமது கணவராக) வாய்ந்த அவ்வேடமங்கையர், — கரி கோட்டை கொல்லை வினை நெல்லை குற - யானைகொம்புகளைப் புனங்களிலேவிளையாநின்ற மலைநெல்முதலிய தானியங்களைக் குற்றுதற்கு — வரையாது கொள் காளத்தி நேயரை - நீக்கமின்றிக் கைக்கொண்டு செல்லும் காளத்திமலையினிடத்தே விருப்பமுடையவரும்—வான் தில்லைக்கு உறவரை - மேலாகிய சிதம்பரதலத்தில் உறவாயிருப்பவருமாகிய— நம் முதுகுன்றரை சேர்வல் என்று ஊர் எல்லைக்கு உற - நமது பழமலைநாதரைச் சென்று தரிசிப்பேனென்று அத்தலத்தினெல்லையிலே(ஒருவன்) உற்றால்,—அரைமாத்திரைக்கே நலம் ஈகுவர்-அவனுக்கு அரைநொடியளவிற்குள்ளே நன்மையைக் கொடுத்தருளுவர். எ-று. குற இடைக்குறை. தில்லைக்கு எல்லைக்கு மாத்திரைக்கு என்பன வேற்றுமைமயக்கம். உற வினையெச்சத்திரிபு. (௧௨)

ஈகையிலங்கைதவமுளமெங்ஙனமெய்தவமென்
றோகையிலங்கைவடிவேலொடுவருந்தோன்றறந்தை
வாகையிலங்கையரசிறவூன்றியவள்ளன்மழு
மாகையிலங்கைம்முகமுதுகுன்றன்மலர்ப்பதமே.

(இ-ள்.) ஈகை இலம் கைதவம் உளம் - (ஒருவருக்கும் ஒரு பொருளைக்) கொடுத்தறியேம் வஞ்சனையையுடையேம் (இப்படிப்பட்ட யாம்),—மென் தோகையில் அங்கை வடிவேலொடு வரும் தோன்றல் தந்தை - மிருதுவான தூவியையுடைய மயிலிலேறிக் குடங்கையேந்திய வடித்த வேலாயுதத்தோடு எழுந்தருளிவரும் முருகக்கடவுளுடைய பிதாவும்—வாகை இலங்கை அரசு இற ஊன்றிய வள்ளல் - (திக்குவிசயம்பண்ணி) வெற்றிமாலையை யணிந்த இராவணன் (கைலைமலையை யெடுத்தகாலத்து முதுகுதண்டு) இற்றுவிழ (காலினது பெருவிரலால்) இருத்திய தியாகியும்—மழு மா இலங்கு கை ஐம்முகம் முதுகுன்றன் - பரசும் மானும் பிரகாசிக்கும் கரங்களையும் ஐந்து வதனத்தையுமுடைய பழமலைநாதருமாகிய சிவபெருமானுடைய—மலர்ப்பதம் எங்ஙனம் எய்துவம் - தாமரை மலர்போலுந் திருவடிகளை எப்படியடையக்கடவேம். எ-று. பின்னர் சாமகீதத்திற்கிரங்கி அவ்விராவணனுக்கு வேண்டியவரங்களைத் தருதலின் வள்ளலென்றார். மா. என்பது னகரச்சாரியை பெறாதுநின்றது. (கஅ)

பதம்பரவைக்குவருந்துபிராற்குப்பசுமயின்மேற்
கதம்பரவைக்குவரச்சுற்றுகட்செவிக்கங்கணற்குச்
சிதம்பரவைக்குமுதுகுன்றவாணற்குச்செல்வமெல்லா
மதம்பரவைக்குநிகர்கரித்தோறலைமாலைகளே.

(இ-ள்.) பரவைக்கு பதம் வருந்து பிராற்கு - பரவைநாச்சியார் பொருட்டுத் (தூதுநடந்து) திருவடிகள் வருந்திய கர்த்தரும்—கதம்பர் பசுமயின்மேல் அவைக்கு வர சுற்று கட்செவி கங்கணற்கு- கடப்பமாலையையணிந்த முருகக்கடவுள் பசிய மயிலின்மேலேறிக் கொண்டு தமது சபைக்குவர (அம்மயிலைக்கண்டு நடுங்கிக் கைகளிலே) சுற்றிக்கொள்ளும் சர்ப்பகங்கணத்தை யுடையவரும்—சிதம்பர

(இ-ள்.) வெல்ல வணங்கும் மலையாய் - முப்புரத்தைவெல்லு தற்கு வில்லாகவளைந்துநிற்கும் மேருமலையையுடையவரே,—முதுகிரி வேதியனே - பழமலையில்வாழும் அந்தணரே,—வேல் நெடும் கண் நல்ல அணங்கு - வேலைநிகர்த்த நெடியகண்களையுடைய நல்ல தெய்வப்பெண்போலும் என்மகள்,—வணங்கும் நினைவால் மெல்ல எதிர்ந்திட - (உம்மை) வணங்கும் சிந்தனையோடு மெல்ல முன்னேவர;—நீ வளை உடையோடு நடந்திலை - தேவரீர் (அவளுடைய)வளையல்களும் வஸ்திரமுமாகிய இவற்றோடுசென்றீரில்லை:—கொல்ல அணங்கும் மதி சுமந்தே நின்ற கொள்கை என்னோ - கொல்லும்படிவருத்துகின்ற இளஞ்சந்திரனையும் தாங்கிக்கொண்டே நிற்கின்ற தன்மையாதோ? அறியேன். எ-று. [நற்றாயிரங்கல்.] (௭0)

வேதியவாவிதனக்காவியாகியவித்தகபெண்
பாதியவாவிமலர்த்தேன்பெருகும்பழமலைவாழ்
சோதியவாவிவருவிடைப்பாகநின்றொண்டருறு
நீதியவாவியவரையென்றேசென்றுநேர்குவனே.

(இ-ள்.) வேதிய - அந்தணரே,—ஆவி தனக்கு ஆவி ஆகிய வித்தக - உயிர்க்குயிராகி விளங்குகின்ற ஞானசொரூபரே,—பெண் பாதிய - அம்பிகையை அர்த்தபாகத்தில் உள்ளவரே,—வாவி மலர் தேன் பெருகும் பழமலை வாழ் சோதிய - தடாகங்களிலே பூக்களிலுள்ளதேன் பெருகிநிற்கும் திருமுதுகுன்றத்தில் வாழ்கின்ற சோதிசொரூபரே,—வாவி வரு விடை பாக - தாவிச்செல்லும் இடபத்தை நடாத்துபவரே,—நின் தொண்டர் உறும் நீதி அவாவி அவரை என்று சென்று நேர்குவனோ-உம்முடைய அடியவர்கள் கைக்கொண்ட ஒழுக்கங்களையவாவி அவரை எக்காலமடைந்து உய்ந்து வாழ்வனோ? எ-று. (௭௧)

நேருமடியர்தமக்குறவாயவர்நேசமறச்
சோருமடியர்தமையணுகாதவர்தும்பியினாற்
சாருமடியர்மணிநிறவண்ணன்றரையிடந்து
தேருமடியர்முதுகுன்றவாணுதற்றீக்கண்ணரே.

(இ-ள்.) தும்பியினால் சாரும் மடியர் - யானையினாற்கிடைத்த வஸ்திரத்தையுடையவரும் - நிறம் மணி வண்ணன் தரை இடந்து தேரும் அடியர் - காந்திபெற்ற நீலமணிபோலும் நிறத்தையுடைய திருமாலானவர் பூமியைப்பிளந்து தேடாநின்ற திருவடிகளையுடையவரும்—முதுகுன்றம் வாள் நுதல் தீ கண்ணர் - திருமுதுகுன்றத்திலேவீற்றிருக்கும் காந்திபெற்ற நெற்றியிலே அக்கினிக்கண்ணையுடையவருமாகிய சிவபெருமான்,—நேரும் அடியர் தமக்கு உறவு ஆயவர்-அன்போடடைந்த அடியவர்களுக்குஉறவாகியிருப்பவர்;—நேசம் அற சோரும் மடியர்தமை அணுகாதவர் - அன்புநீங்கச் சோர்ந்துதிரியும் சோம்பலையுடையவர்களைச் சேராதவர். எ-று. (எஉ)

கண்டீரவந்தனைநேர்ந்தாங்கருகக்களிற்றினைமுன்
கொண்டீரவந்தனைவானோர்செயுமுதுகுன்றனொடு
வண்டீரவந்தனைநேர்வாளைக்கோலம்மதனனெய்யும்
புண்டீரவந்தனைசேர்தியென்றோதுமின்போமின்களே.

(இ-ள்.) வண்டீர் - வண்டுகளே,—முன் கண்டீரவந்தனை நேர்ந்து ஆங்கு அருக களிற்றினை கொண்டு ஈர - முற்காலத்திலே சிங்கத்தை யெதிர்ந்தாற்போல அழிவையடையும்படி யானையைக் கையிற்பிடித்து அதனது தோலையுரிக்க—வானோர் வந்தனை செயும் முதுகுன்றனொடு - தேவர்கள் (உய்ந்தோம் உய்ந்தோமென்று) வணங்கும் பழமலைநாதரோடு,—அம்மதனன் எய்யும் கோல் புண் தீர வந்தனை - அந்த மன்மதனானவன் பிரயோகிக்கும் பாணங்களால்

நேரிட்ட புண்கள் நீங்கும்படி (தேவரீர்)வந்து—அவம்தனை நேர்வாளை சேர்தி என்று ஓதுமின் - சுகத்தையிழந்துகிடக்கும் எங்களுடைய தலைவியைக் கூடுவீராகவென்று சொல்லுங்கள்;—போமின்கள்-விடைபெற்று விரையச்செல்லுங்கள். எ-று. [வண்டுவிடுதூது.] வந்தனை முற்றெச்சம். வண்டீர் முதுகுன்றனொடு ஓதுமின் போமின் என இயையும். (௭௩)

போதுமின்மாலைவகைவகையாகவம்பொற்றொடியீ
ரோதுமின்மாலைதரின்வம்மினில்லையென்றோட்டினரேல்
மாதுமின்மாலைவருமுனஞ்சாமென்றுவண்கைமலர்
மோதுமின்மாலைமகிழ்குன்றைவாணர்தம்முன்னடைந்தே.

(இ-ள்.) அம் பொன் தொடியீர் - அழகிய பொன்னாலாகிய வளையலையணிந்த பாங்கிகளே,—வகை வகை ஆக மாலை போதுமின் - வகுப்புவகுப்பாக ஒழுங்குபடச் செல்லுவீராக;—மாலை மகிழ் குன்றைவாணர்தம் முன் அடைந்து ஓதுமின் - விஷ்ணுவை மகிழ்ந்தடிமைகொண்ட பழமலைநாதருக் கெதிரேசென்று (யான் விரகத்தாற்படும்பாட்டைச்) சொல்லுவீராக;—மாலை தரின் வம்மின் - அவர் கொன்றைமாலையைத்தந்தால் வாங்கிவருவீராக;—இல்லை என்று ஓட்டினரேல் - கொடுப்பதில்லையென்று (உங்களைத்) துரத்துவாராயின்,—மின் மாது மாலை வரும் முனம் சாம் என்று வண் மலர் கை மோதுமின் - மின்னற்கொடிபோலும் தலைவியானவள் மாலைக்காலம் வருதற்குமுன்னமே சாவாளென்றுசொல்லி வளப்பம் பொருந்திய மலர்போலுங்கைகளால் (முகத்திலே) அறைந்துகொள்ளுவீராக. எ-று. கைமோதல் கைகளை ஒன்றோடொன்று தாக்கல் எனினும் அமையும். [தலைவி மாலைவிருப்புரைத்து விடுத்தல்.] (௭௪)

முன்னஞ்சிலம்புசிலையாக்கியநன்முதுகிரியாய்
பொன்னஞ்சிலம்புசிலம்புதலோடையிற்பூஞ்சிறக
ரன்னஞ்சிலம்புநடையிளமானையனங்கனெய்து
தன்னஞ்சிலம்புகுவளையல்லாதுதணந்தனனே.

(இ-ள்.) முன்னம் சிலம்பு சிலை ஆக்கிய நல் முதுகிரியாய்-முற்காலத்திலே மேருமலையை வில்லாகவளைத்த நல்ல பழமலைநாதரே,—பொன்னம் சிலம்பு ஓடையில் பூம் சிறகர் அன்னம் சிலம்புதல் சிலம்பும் நடை இள மானை - பொற்சிலம்புகள் மடுக்களிலுள்ள பொலிவுபெற்ற இறகுகள்வாய்ந்த அன்னங்களொலித்தலைப்போல ஒலிக்கும்படி நடக்கின்ற இளமைதங்கிய மான்போலும் எனதுபெண்மேல்,—அனங்கன் தன் அம்பு அஞ்சில் குவளை அல்லாது எய்து தணந்தனன் - மன்மதனானவன் தன்னுடைய பாணம் ஐந்தனுள் நீலோற்பலமொழிந்த ஏனை நான்குபாணங்களையும் எய்து இழந்து வறியனாயினான். எ-று. [நற்றாயிரங்கல்.] எனவே, நீலோற்பலமென்னும் பாணத்தையேவிக் கொல்லுதலொன்றுதவிர ஏனைத்துக்கங்களெல்லாம் விளைத்தனனென்பது கருத்து. பஞ்சபாணங்களின் செயல்களை, "நினைக்குமரவிந்த நீள்பசலை மாம்பூ - வனைத்துணவு நீக்குமசோகு - வனத்திலுறு - முல்லை கிடைகாட்டு மாதே முழுநீலங் - கொல்லுமதனம்பின் குணம்." என்னும் வெண்பாவானறிக. மானை வேற்றுமைமயக்கம். (எ௫)

தணந்தவளக்கரிமேனியளாங்கொல்வெண்சங்கினங்கண்
மணந்தவளக்கரினின்றழுமோவலவாவுயிர்க
ளுணந்தவளக்கரிதாமுதுகுன்றரனேங்கமர
கணந்தவளக்கரியானெத்திறையன்றிக்காப்பிலையே.

(இ-ள்.) வலவா-தேர்ப்பாகனே,—தணந்தவள் அக்கரி மேனியள் ஆம் கொல் - என்னைப்பிரிந்த தலைவியானவள், (காமத்தாற்கருகி) அந்த கரிபோலும் மேனியையுடையளாவளோ!—வெண் சங்கு இனங்கள் மணந்த அளக்கரின் நின்று அழுமோ-வெண்மையாகிய சங்குக்கூட்டங்கள் கலந்த சமுத்திரம்போலக் (கண்ணீரைச்சொரிந்து) நின்று அழுவளோ!—உயிர்கள் உள் நந்த அளக்க அரிது ஆம் முதுகுன்று அரன் - ஆன்மாக்களுடைய மனங்களால் மிகவும் அளவிடுதற்கு அரியதாகிய பழமலைநாதரும்—ஓங்கு அமரகணம் தவளம் கரியான் எத்து இறை அன்றி காப்பு இலை - உயர்ந்த தேவகணங்களும் (அவர்க்குத்தலைவனாகிய) வெள்ளையானையையுடைய இந்திரனும் புகழும் தலைவருமாகிய சிவபெருமானையன்றி வேறே காப்பவரொருவருமில்லை. எ-று. [பாசறைமுற்றி மீண்டதலைமகன் பாகனேடு பரிந்தியம்பியது.] அளக்க என்னும் வினையெச்சத்தகரம் விகாரத்தாற்றொக்கது. (எசு)

காப்புக்கரியுந்திருமகணாயகன்காப்பவற்றின்
பூப்புக்கரியுந்தலையுடையானும்பொருந்தவைத்தான்
மாப்புக்கரியுங்குயிலும்பயில்பொழில்வண்டில்லையான்
மூப்புக்கரியும்புலியுங்கொன்றீர்ந்தமுதுகுன்றனே.

(இ-ள்.) மா புக்கு அரியும் குயிலும் பயில் பொழில் வண் தில்லையான் - மாமரங்களிலே குடிபுகுந்து கிளிகளும் குயில்களும் சத்திக்கின்ற சோலைகள்சூழ்ந்த வளப்பம்பொருந்திய சிதம்பரத்தையுடையவரும்—மூப்பு கரியும் புலியும் கொன்று ஈர்ந்த முதுகுன்றனே- முதிர்ந்த யானையையும் புலியையும்வதைத்துத் தோலையுரித்துத்தரித்த பழமலைநாதருமாகிய சிவபெருமானே,—காப்புக்கு அரியும் திருமகள் நாயகன் காப்பவற்றின் பூப்புக்கு அரியும் தலை

உடையானும் பொருந்த வைத்தான் - காத்தற்றொழிலுக்கு விஷ்ணு மூர்த்தியையும், இலக்குமிகணவராகிய அவ்விஷ்ணுவால் காக்கப் படும் சராசரங்களினுடைய படைத்தற் றொழிலுக்கு (வைரவக்கட வுளால்) கிள்ளப்பட்ட நடுத்தலைக்குறையையுடைய பிரமதேவனை யும், (கர்த்தர்களாகப்) பொருந்தும்படி வைத்தருளினார். எ-று. (எஎ)

முதுமறையந்தமுறுபொருளேநன் முழுப்பணிக்கு
விதுமறையந்தமுடியாய்புராணம்விளங்கிரண்டொன்
பதுமறையந்தமுதுகுன்றவாணநின்பாதம்வணங்
குதுமறையந்தகனைமார்பிலெம்மைக்குறுகிடினே.

(இ-ள்.) முது மறை அந்தம் உறு பொருளே - பழமையாகிய வேதமுடிவிலே பொருந்திய உண்மைப்பொருளே,— நல் முழு பணிக்கு விது மறை அந்தம் முடியாய் - நல்ல முழுப்பாம்பாகிய வாசுகிக்குப்பயந்து இளம்பிறைமறைகின்ற அழகிய திருமுடியை யுடையவரே,—விளங்கு இரண்டு ஒன்பது புராணமும் அறை அந்த முதுகுன்றவாண - பிரகாசிக்கின்ற பதினெண்புராணங்களும் துதி க்கின்ற அந்த பழமலையில்வாழ்பவரே,—நின் பாதம் வணங்குதும்- தேவரீருடைய திருவடிகளைத் தொழுவோம்;—எம்மை குறுகிடின் அந்தகனை மார்பில் அறை - எம்மைப்பிடிக்கவந்தால் இயமனை மார் பின்கண்ணே மோதுவீராக. எ-று. (எஅ)

குறுகுமுனிவனையன்றுண்டவிம்முதுகுன்றனுக்கு
மறுகுமுனிவனைசெய்தாலுய்வாரெவர்வந்தருளென்
றறுகுமுனிவனைபோதுமிடார்நமனார்முனிவு
முறுகுமுனிவனையெய்தாரறிவறுமூடரினே.

(இ-ள்.) குறுகும் முனிவனை அன்று ஆண்ட இம்முதுகுன்றனுக்கு - குறுகிய அகத்தியமகாமுனிவரை முற்காலத்திலே அடிமைகொண்டருளிய இந்த பழமலைநாதருக்கு—வந்து அருள் என்று உளி அறுகும் வனை போதும் இடார் - தேவரீரெழுந்தருளிவந்து அனுக்கிரகிக்கவேண்டுமென்று தியானித்து அறுகையும் தொடுத்த பூக்களையும் சாத்தாதவர்களும்—நமனார் முனிவு முறுகுமுன் இவனை எய்தார் அறிவு அறும் மூடரின் - இயமனார் வருத்துதற்குக் கோபமுதிருதற்கு முன்னமே இப்பழமலைநாதனை அடைக்கலமாக அடையாதவருமாகிய அறிவில்லாத மூடர்களைப்போல—மறுகும் முனிவு அனை செய்தால் உய்வார் எவர்-(பெண்கள்)மயங்குதற்கேதுவாகிய கோபத்தை மாதாவே செய்வாளாயில் உலகத்திலே உய்வார்யாவர். எ-று. [நற்றாய்முனிவுகண்டு தலைவிவருந்தல்.] உளி இடைக்குறை. முதுகுன்றனுக்கு இடார் என இயையும். (எக)

மூடாநமாதிமிரையடைந்தாயலென்முன்னனுகன்
வீடாநமாதிபெருமானுதைக்கினுமெய்ப்புகழைப்
பாடாநமாதியெழுத்தைந்துமோதிப்பழமலைவாழ்
வீடாநமாதியடியாரடியருண்மேவினமே.

(இ-ள்.) மூடா நமா - மூடனாகிய இயமனே,—பழமலை வாழ் வீடு ஆம் நம் ஆதி - (யாம்,) முதுகுன்றத்தைத் தாம்வீற்றிருக்கும் வீடாகக்கொண்டிருக்கும் நமது ஆதிப்பொருளாகிய சிவபெருமானுடைய—மெய் புகழை பாடா - உண்மையாகிய கீர்த்திகளைப்பாடி,—நம ஆதி ஐந்து எழுத்தும் ஓதி - நகரமுதலாகிய பஞ்சாக்கரங்களையும் உச்சரித்து,—அடியார் அடியருள் மேவினம் - (அக்கடவுளுடைய) அடியவர்களுடைய அடியவர்கூட்டத்துள்ளே தங்கியிருக்கின்றோம்; ஆகையால்,—திமிரா அடைந்து ஆயல் - அகங்கார

ங்கொண்டு (என்னுடையகுணங்களை) ஆராய்ந்துபாராதே;—என் முன் அணுகல் - எனக்குமுன்னும் வாராதே;—மீள்-மீண்டுவிடு; (மீளாதெதிர்ப்பையேல்,)—இனும் பெருமான் உதைக்கு தானம் ஆதி- இன்னுமொருமுறை சிவபெருமானுதைக்கு இடமாவாய். எ-று. இன்னும் என்பது குறைந்து நின்றது. (அ0)

மேவத்தகரையிவர்மகவீன்றதொல்வெற்பரசு
சேவத்தகவாவொடுபூசித்துன்னைவிண்செல்வமுறும்
பூவத்தகரைநகுவேமெமக்குநின்பொங்கருளா
லோவத்தகரைவகைப்பாசமுந்தம்முரங்குலைந்தே.

(இ-ள்.) தகரை மேவ இவர் மகவு ஈன்ற தொல்வெற்பு அரச- (நாரதர்புரிந்த யாகத்திற்றோன்றி உலகத்தையழிக்கத்தொடங்கிய) ஆட்டுக்கடாவை (வாகனமாக) விரும்பியேறிய முருகக்கடவுளைப் பெற்ற பழமலைநாதரே,—சே அத்த - இடபவாகனத்தையுடைய பிதாவே,—எமக்கு நின் பொங்கு அருளால் ஐவகை பாசமும் தம் உரம் குலைந்து ஓவ தகர் - எங்களுக்குத் தேவரீருடைய மிக்கதிருவருளால், ஐவகைப்பட்ட பாசங்களும் தம்முடைய வன்மைகுறைந்து நீங்கும்படி சேதிப்பீராக; சேதிக்கில்,—உன்னை கவாவொடு பூசித்து விண் செல்வம் உறும் பூவத்தகரை நகுவேம் - உம்மை உருக்கத்தோடு வழியட்டு விண்ணுலகபதவியை விரும்பியடையும் உலகவியாபாரிகளைப் பழித்துச்சிரிப்பேம். எ-று. மேவ வினையெச்சத்திரிபு. ஐவகைப்பாசம்-ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி. (அக)

குலையாநிலமும்விசும்புந்தொழுமுதுகுன்றமதிக்
கலையாநிலமும்மடியழல்காயவக்காய்கனலின்

மலையாநிலமுமுடன்கூடவேமெனைவாங்குகழைச்
சிலையானிலமுமெமதில்லமாய்நின்றுசீறுவனே.

(இ-ள்.) குலையா நிலமும் விசும்பும் தொழும் முதுகுன்ற - குன்றுதலில்லாத மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் வணங்கும் பழமலைநாதரே,—மதி கலை ஆம் நில அழல் மும்மடி காய-சந்திரகலைகளிலுண்டாகின்ற சந்திரிகையானது அக்கினியினும் மூன்றுபங்கு அதிகமாகச்சுட—அக்காய் கனலின் மலையாநிலமும் உடன் கூட வேம் எனை - அந்த சுடுகின்ற அக்கினியோடு தென்றற்காற்றும் இணையாகச் சேர (அதனால் உடலம்) வேகின்ற என்னை,—வாங்கு கழை சிலையான் இலமும் எமது இல்லமாய் நின்று சீறுவன்-வளைத்த கருப்புவில்லையுடைய மன்மதனுனவன் (தனக்கு) வீடும் எம்முடைய வீடாகக் குடியேறிநின்று (பாணங்களைப்பொழிந்து) கோபிக்கின்றான்: யான் யாதுசெய்வேன்.எ-று. [தலைவிவருந்தல்.]
நிலா என்பது குறுகிநின்றது. (அஉ)

சிறிறையாகமதியுணும்பாம்பணிசெல்வமறை
மாறிரையாகமலிமுதுகுன்றமருவுதற்குச்
சேறிரையாகயிலாசவிலாசசுதேவவென்மின்
சேறிரையாகநிலையென்றுவாழன்மின்றொண்டர்களே.

(இ-ள்.) தொண்டர்களே - அடியார்களே,—சிறு இறை ஆக மதி உணும் பாம்பு அணி - சிற்றுணவாகச் சந்திரனைக்கவர்ந்துதின்னும் நாகங்களையணிந்த சிவபெருமானுடைய—செல்வம் மறை மால் திரை ஆக மலி முதுகுன்றம் மருவுதற்கு சேறிர்-சிறப்பாகிய வேதங்கள் பெரிய அலைகடல்போல முழங்கும் பழமலையையடைதற்குச் செல்வீராக;—ஐயா கயிலாச விலாச சுதேவ என்மின்-தலைவரோ, கைலாசமலையையுடையவரோ, எங்கும் திருவோலக்கங்கொ

ண்டருள்பவரோ, நல்லகடவுளே, என்று தோத்திரஞ்செய்வீராக;— தோல் திரை ஆகம் நிலை என்று வாழன்மின்-தோலானது திரைந்தழியும் இச்சரீரத்தை நிலையென்றுவாழ நினையாதொழிவீராக. எ-று. பாம்பணி வினைக்குறிப்புப்பெயர். பாம்பணி முதுகுன்றம் என இயையும். திரை ஆகுபெயர். (அங)

தொண்டரைக்கூடல்விழையார்பொழின்மலர்த்தூளுதிர்த்தல்
விண்டரைக்கூடலறவுறல்போலுந்தொல்வெற்புறுமைக்
கண்டரைக்கூடலுடையாரைப்போற்றிலர்கற்றறியா
மிண்டரைக்கூடல்வழியேநடத்துபுவீழ்த்துவரே.

(இ-ள்.) தொண்டரை கூடல் விழையார் - அடியவரைக்கூடி வாழ்தலை விரும்பாதவர்களும்—பொழில் மலர் தூள் உதிர்த்தல் விண் தரைக்கு ஊடல் அற உறல் போலும் தொல்வெற்பு உறும் மை கண்டரை - சோலைகள் மலர்களிலுள்ள மகரந்தங்களைச் சிந்துவது, தேவலோகமானது இப்பூவுலகத்திற்குண்டாகிய பிணக்கை நிவர்த்திக்க வருதலை நிகர்க்கின்ற பழமலையில்வீற்றிருக்கும் நீலகண்டத்தையுடையவரும்—கூடல் உடையாரை போற்றிலர் - நான்மாடக்கூடலை யுடையவருமாகிய சிவபெருமானை வணங்காதவர்களும்—கற்று அறியா மிண்டர் - (அக்கடவுளுடைய கீர்த்திகளை) ஆய்ந்தறியாத அகங்காரிகளுமாகிய கீழ்மக்கள்,—ஐ கூடு அல் வழியே நடத்துபு வீழ்த்துவர் - சிலேத்துமக்கூடாகிய இவ்வுடம்பைத் தீயவழியிலே செலுத்திப் பிறவிப்படுகுழியிலே தள்ளுவர். எ-று. விழையார் போற்றிலர் கற்றறியாமிண்டர் வீழ்த்துவர் என இயையும். பூந்துகள் பொன்மயமாயிருத்தலின் விண்ணுலகிற் குவமையாக்கினர். (அச)

வீழிவலஞ்சுழிதில்லைசிராப்பள்ளிவேதவனங்
காழிவலஞ்சுழியன்மேவுகுன்றைக்கடவுள்விழி.

ஞாழிவலஞ்சுழிவெள்வளையானணையன்னகல்விப்
பாழிவலஞ்சுழியுந்தியுள்வாங்குவர்பாவையரே.

(இ-ள்.) வீழி வலஞ்சுழி தில்லை சிராப்பள்ளி வேதவனம் காழி வலம் சுழியல் மேவு குன்றை கடவுள் விடின்-திருவீழிமிழலை திருவலஞ்சுழி சிதம்பரம் திரிசிரபுரம் வேதாரணியம் சீர்காழி திருவல்லம் திருச்சுழியல் என்னும் இத்தலங்களில் வீற்றிருக்கும் பழமலைநாதர் விட்டுப்பிரிந்தால்,—பாவையர் சுழி உந்தி-பிரிந்தமங்கையர், கூடற் சுழிகளை எழுதியெழுதி,—ஆழி வலம் சுழி வெள் வளையான் அணை அன்ன கல்வி பாழி வலம் உள் வாங்குவர்-சக்கரத்தையும் வலம்புரியாகிய வெள்ளிய சங்கையுமுடைய விஷ்ணுமூர்த்தியினது சயனமாகிய ஆதிசேஷனைநிகர்த்த கல்வியினது பெரியவன்மையையும் உள்ளேயிழந்து வருந்துவர். எ-று. [தலைவன் பிரிந்துழித் தலைவிமுதலோர் கூடற்சுழியிழைத்து வருந்தல்.] கல்வியிற்சிறந்த மகளிர்க்கும் கணவரைப்பிரிந்திருத்தல் கூடாதாகலின், குன்றைக்கடவுள் விடின் கல்விப்பாழிவலம் உள்வாங்குவரென்றார். வல்லம் என்னுந்தலம் வலமெனநின்றது. வலமும் என்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது. (அரு)

பாவலருக்குமலிபொருளீந்துகொள்பாட்டினர்க்கு
மேவலருக்குமழுவார்க்குநன்றுதுவெற்பினுக்குக்
காவலருக்குமயலாகிநின்றுகலங்குகின்ற
யாவலருக்குவிளைநிலமாயினையாயிழையே.

(இ-ள்.) ஆய் இழையே - ஆய்ந்த ஆபரணத்தைத் தரித்த என் மகளே,—பாவலருக்கு மலி பொருள் ஈந்து கொள் பாட்டினர்க்கு-சுந்தரமூர்த்திநாயனாருக்கு மிகுந்ததிரவியங்களைக் கொடுத்து ஏற்றுக்கொண்ட திருப்பாட்டையுடையவரும்—மேவலர் உக்கும் மழு

வார்க்கு - சத்துருக்கள் அழிந்தொடுங்குதற்கு ஏதுவாகிய மழுப் படையையுடையவரும்,—நல் முது வெற்பினுக்கு காவலருக்கு - நல்ல பழமலைக்குத் தலைவருமாகிய சிவபெருமானுக்கு,—மயலாகி நின்று கலங்குகின்றாய் - மயக்கங்கொண்டு நின்று கவலைப்படுகின்றாய்;—ஆ அலருக்கு விளைநிலம் ஆயினை - ஆச்சரியம்! பழிச்சொல்லுக்ளுக்கு நீ ஒரு விளைநிலமுமாயினாய். எ-று. [நற்றாயிரங்கல்.] பாவலர் என்பதற்கு திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்முதலிய ஏனைப் பாவலர்களைக்கொள்ளினும் அமையும். (அ௯)

ஆயக்கலையகலுஞ்சீர்முதுகுன்றரசமுனஞ்
சாயக்கலையனிமிர்த்தசெம்மேனியதப்பலில்லா
னேயக்கலையபுழுக்கூடெனுமுடனேயமெல்லா
மாயக்கலையமலமாயைகன்மங்கள்வந்தருளே.

(இ-ள்.) ஆய கலை அகலும் சீர் முதுகுன்று அரச - ஆராய்ந்து பார்க்குங்கால் கலைஞானங்களுக்கும் அப்பாற்பட்டுவிளங்கும் புகழினையுடைய பழமலைநாதரே,— முனம் சாய கலையன் நிமிர்த்த செம் மேனிய - முன்னொருகாலத்தில் (திருப்பனந்தாளில் தாடகையின் பொருட்டுத்) தாழ்ந்து குங்குலியக்கலயநாயனாரால் நிமிர்க்கப்பட்ட செவ்விய திருமேனியையுடையவரே,—தப்பல் இல்லான் நேயம் கல் ஐய - தவறுதெறிந்த சாக்கியநாயனாரது அன்பாகிய கற்களையுடைய தலைவரே,—புழு கூடு எனும் உடல் நேயம் எல்லாம் மாய - புழுக்கள்மலிந்த கூடென்று சொல்லப்படும் இந்த தேகாபிமானமெல்லாம் கெடவும்,—மலம் மாயை கன்மங்கள் கலைய வந்து அருள் - ஆணவம் மாயை கன்மமென்னும் மும்மலங்களும் கலைந்து

நீங்கவும், (தேவரீரெழுந்தருளி) வந்து (அடியேனுக்கு) அனுக்கிரகிக்கவேண்டும். எ-று. (௮௭)

வந்திக்கநாவினினையேவழுத்தமலர்விழியான்
முந்திக்கனாவிதொலைத்தோய்நினதுமுதுவெற்பையே
சிந்திக்கநாவிமதநாறுமாதரைச்சேருமின்ப
நந்திக்கனாவினொழிவாமென்றுன்னுறநல்குதியே.

(இ-ள்.) மலர் விழியால் முந்து இக்கன் ஆவி தொலைத்தோய்-(மேனோக்கிய) செந்தாமரைமலர்போலும் அக்கினிக்கண்ணினால் முற்காலத்திலே கருப்புவில்லையுடைய மன்மதனுயிரை நீக்கினவரே,—நினையே வந்திக்க - தேவரீரையே வணங்கவும்,— நாவில் வழுத்த - (தேவரீரையே) நாவினாற்றுதிக்கவும்,—நினது முதுவெற்பையே சிந்திக்க-தேவரீருடைய பழமலையையே தியானிக்கவும்,—நாவி மதம் நாறும் மாதரை சேரும் இன்பம் நந்தி கனாவின் ஒழிவாம் என்று உன்னுற நல்குதி - கஸ்தூரிமணங்கமழும் பெண்களைக் கூடியணைதலாலுண்டாகும் சிற்றின்பமானது கெட்டுக் கனாவைப்போல பொய்யாக அழிந்துபோமென்று நினைக்கவும், எனக்கருளுவீராக. எ-று. நினையே வெற்பையே என்னும் ஏகாரங்கள் பிரிநிலை. (௮௮)

நல்குரவேநல்லுரைதான்முதுகுன்றர்நாட்டுனக்குச்
சொல்குரவேநல்குரவுறுவேலதொடைகள்பல
மல்குரவேனலிதண்விட்டகம்புக்கமானையிந்த
வொல்குரவேனல்லிடைக்கொடுபோகலென்றோதிலையே.

(இ-ள்.) குரவே - குராமரமே,—நல் குரவு உறு வேல - நல்ல குராமாலையையணிந்த வேற்படையையுடைய தலைவனே,—ஏனல்

பல தொடைகள் மல்கு உரம் இதண் விட்டு அகம் புக்க மானை-தினைப்புனத்தின்கணுள்ள பலகட்டுக்கள் பொருந்திய வலிய பரணைவிட்டு வீட்டையடைந்த மான்போலும் பெண்ணை,— அல்லிடை கொடு போகல்-இராக்காலத்திலே (தனித்துக்) கொண்டுசெல்லாதே;—இந்த ஒல்குரவு என்-இந்த இழிதொழில் (உனக்கு) யாதுக்கு?—என்று ஓதிலை - என்று சொன்னாயில்லை;—முதுகுன்றர் நாட்டு நல்லுரைதான் உனக்கு நல்குரவே சொல் - பழமலைநாதரது நாட்டின்கண்ணே நல்லவசனமும் உனக்குத்தரித்திரமா? சொல்லுவாயாக. எ-று [நற்றாய் சுரமொடுபுலம்பல்.] உரைதானும் என்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது.

(அ௯)

ஓதித்திருக்குமொழிவதல்லாமலுன்னுண்மைநிலை
சாதித்திருக்குமியல்புதந்தாயிலைதன்மையெல்லாம்
போதித்திருக்குமொழிகுன்றைவாணபொருப்புதவுஞ்
சோதித்திருக்குமரிபாகசுந்தரன்றூதுவனே.

(இ-ள்.) தன்மை எல்லாம் போதித்து இருக்கும் ஒழி குன்றைவாண - அருட்டிறங்களையெல்லாம் (ஆன்மாக்களுக்கு) உணர்த்தி (முற்றும் ஓதும் ஆற்றலின்மையால்) வேதங்களும் ஒடுங்கிநிற்கும் பழமலைநாதரே,—பொருப்பு உதவும் சோதி திரு குமரி பாக - இமயமீன்ற பிரகாசம்பெற்ற அழகிய உமாதேவியினது ஓர்பாகத்தையுடையவரே,—சுந்தரன் தூதுவனே - சுந்தரமூர்த்திநாயனருக்குத் தூதாகச்சென்றவரே,—ஓதி திருக்கு மொழிவது அல்லாமல்-சில நூல்களைக்கற்று விபரீதப்பொருள்களைச் சொல்லுவதையேயன்றி,—உன் உண்மை நிலை சாதித்து இருக்கும் இயல்பு தந்தாய் இலை - உமது

உண்மையாகிய முத்திநிலையில் வழுவாதுபழகிச் (சமாதியோடுகூடி) இருக்கும் சுபாவத்தை (அடியேனுக்குத்) தந்தருளினீரில்லை. எ-று.

தூதுகண்டாலுமதியணிவேணியர் துன்னிவந்தென்
காதுகண்டாலுமுடன்மூக்கின்பெய்தநல்காரெனவெம்
மாதுகண்டாலுமுவக்கப்படுமொழிவந்தனள்கார்ப்
போதுகண்டாலுமயில்வாழ்பொழிற்பழம்பூதரனே.

(இ-ள்.) கார் போது கண்டு ஆலும் மயில் வாழ் பொழில் பழம்பூதரனே - கார்காலத்தைக்கண்டு ஒலித்து ஆடாநின்ற மயில்கள் வாழ்கின்ற சோலைகள்சூழ்ந்த முதுகிரிநாதரே,—கண்டாலும் உவக்கப்படும் மொழி எம் மாது-கற்கண்டினாலும் விரும்பப்படுகின்ற மதுரமொழியையுடைய எமது தலைவியானவள்,—மதி அணி வேணியர் தூது கண்டாலும் - சந்திரனைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமான் (நானனுப்பிய) தூதுவரைக்கண்டாராயினும்—துன்னி வந்து என் காது கண் நாலும் உடல் மூக்கு இன்பு எய்த நல்கார் என-(என்னிடத்தே) நெருங்கிவந்து காதும் கண்ணும் நாவும் உடலும் மூக்குமாகிய ஐம்பொறிகளும் (கேட்டு கண்டு உண்டு உற்று உயிர்த்து அறிதலாகிய) ஐவகையின்பங்களையும் அனுபவிக்கும்படி அருளாரென்று வெறுத்து,—வந்தனள் - (இரவுக்குறியிடையீடுபட்டு விடியற்காலையில்) வீடுவந்துசேர்ந்தனள். எ-று. [இரவுக்குறி பிழைத்தமை இறைவற் கிருளையுரைத்தல்.] நாலும் என்னும் உம்மை ஏனையிடத்தும் கூட்டப்பட்டன. (கூக)

பூதரனன்றுமலைக்கென்றுகொள்ளும்புராந்தகனார்
சீதரனன்றுபொழிலெனுங்குன்றைத்திருநகரார்

காதரனன்றும்விழிபெறுமாறுடைக்கண்ணுதலார்
மாதரனன்றுவருமதிக்கோய்தலைமாற்றிலரே.

(இ-ள்.) சிலைக்கு பூதரம் நன்று என்று கொள்ளும் புராந்தக
னூர் - வில்லாதற்கு மேருமலையே நல்லதென்று வளைத்துக் கையிற்
கொண்ட திரிபுராந்தகரும்—சீதரன் அன்று எனும் பொழில் திரு
குன்றை நகரார் - மாயவனென்று மயங்கிப் பின்னர் அன்றெனத்
தெளியும் சோலைகள் சூழ்ந்த திருமுதுகுன்றமென்னும் தலத்தையு
டையவரும்—காதரன் அன்றும் விழி பெறுமாறு உடை கண்ணுத
லார்- இவினைத்தொடர்பையுடைய யான் (கேவலத்திற்கிடந்த)அக்
காலத்தும் அருள்நோக்கம் பெறும்படி என்னையடிமையாகவுடைய
நெற்றிக்கண்ணருமாகிய சிவபெருமான்,— அனன்று வரும் மதிக்
கு மாதர் ஓய்தலை மாற்றிலர் - தழலைப் பரப்பிவருகின்ற சந்திரனு
க்கு (தன்னைவிரும்பிய) மகளிர் வருந்திநிற்றலை நீக்கினாரில்லை. எ-று.
[நற்றாயிரங்கல்.]

(௯௨)

மாற்குச்சிவந்தமலர்த்தாண்முதுகிரிவாணன்மறை
நூற்குச்சிவந்தவிராப்பொருளென்பவர்நோக்குளன்வேள்
கோற்குச்சிவந்தவிறலாளனின்னுங்குறுகிலனிம்
மேற்குச்சிவந்ததறியேனிவட்குவிளைவதுவே.

(இ-ள்.) மாற்கு உச்சி வந்த மலர் தாள் முதுகிரி வாணன்-வி
ஷ்ணுமூர்த்திக்கு உச்சியிற்றரிக்கக்கிடைத்த தாமரைமலர்போலும்
திருவடிகளையுடைய பழமலைநாதரும்—மறை நூற்கு சிவம் தவிராப்
பொருள் என்பவர் நோக்கு உளன்-வேதநூலுக்குச் சிவபெருமானே.

ருவரோ நீங்காப்பரம்பொருளென்று நிச்சயித்துணரக்கும் அன்பர்களு
டைய காட்சிக்கெளியவரும்—வேள் கோற்கு சிவந்த விறல் ஆளன்-
மன்மதனுடைய மலரம்புகள்பொருட்டுக் கோபித்த வெற்றியையு
டையவருமாகிய சிவபெருமான்,—இன்னும் குறுகிலன் - இதுகா
றும் வந்தாரில்லை;—இம்மேற்கு சிவந்தது - இம்மேலைத்திசையே
செவ்வானமாயிற்று:—இவட்கு விளைவது அறியேன் - இனி இப்பெ
ண்ணுக்கு உண்டாகுந் துன்பங்களை யானறியேன். எ-று. [மாலைய
ம்பொழுதுகண்டு நற்றாயிரங்கல்.] (கூஙு)

விளையவளையுமணிநெல்வயன்முதுவெற்பிறைவ
னளையவளையுறவுடையானவ்வனங்கசிலை
வளையவளையுமுடையுந்துறந்துவருந்துறுமிவ்
விளையவளையுமொருபுடைசாரவிருத்திலனே.

(இ-ள்.) மணி விளைய வளையும் நெல் வயல் முதுவெற்பு இறைவன் - மணிகொண்டு விளைதலால் சாய்கின்ற நெற்பயிர்களையுடைய வயல்கள்சூழ்ந்த பழமலைநாதரும்—அளைய அளையும் உறவு உடையான்-அன்போடும் அடிமைபுக (அவரிடத்தே) தாழுங்கலக்கும் நட்டையுடையவருமாகிய சிவபெருமான்,—அவ்வனங்கன் சிலை வளைய-அந்த மன்மதனுடைய கருப்புவில்வளைந்தவுடனே—வளையும் உடையும் துறந்து வருந்துறும் இவ்விளையவளையும் ஒரு புடை சார விருத்திலன் - வளையல்களையும் வஸ்திரத்தையுமிழந்து துக்கித்துக்கிடக்கின்ற இந்தச் சிறுபெண்ணையும் ஒருபக்கத்திலே தங்கும்படி வைத்தாரில்லை. எ-று. [நற்றாயிரங்கல்.] (கூசு)

இருத்தவிருப்பதிடத்திலல்லாமலிருப்பலென
நிருத்தவிருப்பமுதுகுன்றவாணனைநீவலியுஞ்
செருத்தவிருப்பவுததியையாருணச்சிந்தைசெய்வர்
திருத்தவிருப்பவலையாவர்மெல்லுவர்தேமொழியே.

(இ-ள்.) தேன் மொழியே - தேன்போலும் மொழியையுடைய எனது மகளே,—இருந்த இருப்பது இடத்தில் அல்லாமல் இருப்பல் என-(தேவரீர்) இருத்திவைக்க நானிருந்துவாழ்வது இடப்பாகத்திலல்லாமல் (மற்றொருதானங்களில்) இருந்து வாழமாட்டேனென்று—நிருத்தம் விருப்பம் முதுகுன்றவாணனை நீ வலியும் செருதவிர் - நடனத்தின்கண்ணே ஆசையையுடைய பழமலைநாதனை நீ வலிந்துவாதாடும் சண்டையைவிட்டுவிடு;—உப்ப உததியை உணயார் சிந்தை செய்வர் - உப்பையுடைய சமுத்திரநீரைக் குடிப்போமென்று யாவர்நினைப்பார்;—இருப்பு திருத்த அவலை யாவர் மெல்லுவர் - இரும்பினாலே திருத்தமாகச்செய்யப்பட்ட அவலை யாவர் மென்று தின்பார். எ - று. [நற்றுயிரங்கல்.] முடியாதென்பது கருத்து. (கூரு)

தேவியுமானும்விளையாடிடமுடைச்செங்கணுத
லாவியுமானும்வருஞ்சீர்முதுகுன்றணிவிழவைக்
காவியுமானும்விழியாய்கண்டெய்தெனக்கன்மறுகி
னேவியுமானும்மகட்கிடர்நீர்செய்திரோழையரே.

(இ-ள்.) ஏழையரே - பேதைமையுடைய தாய்மார்களே,—காவியும் மானும் விழியாய் - (பிறவற்றையேயன்றி) நீலோற்பலமல

ளாயும் ஒப்பாகின்ற கண்களையுடைய புதல்வியே,— முதுகுன்று தேவியும் மானும் விளையாடு இடம் உடை நுதல் செங்கண் ஆவியும் ஆனும் வரும் - திருமுதுகுன்றத்திலே, உமாதேவியும் மானும் விளையாடாநின்ற இடதுபக்கத்தையுடைய சிவந்த நெற்றிக்கண்வாய்ந்த எமதுயிர்போலும் சிவபெருமானும் (அவரூர்ந்தருளும்) இடபவாகனமும்வருகின்ற—சீர் அணி விழவை கண்டு எய்து என கண் மறுகின் ஏவி - சிறப்புப்பொருந்திய அழகிய திருவிழாவைத் தரிசித்து வரக்கடவாயென்று விசாலம்பெற்ற வீதியிலே அனுப்பி,—உமால் நும் மகட்கு இடர் நீர் செய்திர் - உங்களாலேயே உங்களுடையபுத்திரிக்குத் துக்கங்களை நீங்கள் செய்தீர்கள். எ-று. [தலைவிவருத்தங் கண்டோர் தாய்மாரை நிந்தித்தல்.] (கசு)

அடலையாறுகிழித்தெதிரேறவிண்ணேறுபுகழ்க்
கூடலையாறுபுலியூர்மகிழ்முதுகுன்றர்பெற்ற
வேடலையாறுமுயிர்த்தெடுத்தேந்துமென்கைகொடுத்
தாடலையூாறுவருகவென்பார்நல்லுமைதனையே.

(இ-ள்.) ஏடு அலை ஆறு கிழித்து எதிர் ஏற விண் ஏறு புகழ்- (திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருப்பாசுரமெழுதிய) பனையேடு அலையையுடைய வைகையாற்று நீரைக்கிழித் தெதிரேசெல்ல விண்ணுலகமளவுஞ் சென்ற கீர்த்தியையுடைய—கூடல் ஐயாறு புலியூர் மகிழ் முதுகுன்றர் - மதுரையும் திருவையாறும் சிதம்பரமுமாகிய தலங்களை விரும்பிவீற்றிருக்கின்ற பழமலைநாதரானவர்,— பெற்ற வேள் தலை ஆறும் உயிர்த்து எடுத்து ஏந்து மென்கை கொடுத்து - தாம்பெற்ற முருகக்கடவுளை ஆறுதலைகளினுச்சியினும் மோ

ந்து இரண்டுகையினாலும் தழுவியெடுத்து ஏந்திக்கொண்டு மெல்லியகைகளிலே கொடுத்து,—நல் உமைதனை ஊடலை ஆறு வருக என்பார்-நல்ல உமாதேவியாரைநோக்கி நீ பிணக்கையொழி சமீபத்திலேவரக்கடவாய் என்றுசொல்லுவர். எ-று. (கள)

உமையிடப்பாகனலங்கூர்முதுகுன்றுடையனராச்
சுமையிடப்பாகவரிதேடடியுறத்தூமலர்க
டமையிடப்பாகமருவுவரேலவர்தங்களைப்பா
ரமையிடப்பாகனணுகானுதைநினைந்தஞ்சுவனே.

(இ-ள்.) உமை இடம் பாகன் - உமாதேவியாரை இடதுபாகத்திலுடையவரும்—நலம் கூர் முதுகுன்று உடையன் - நன்மைமிகுந்த பழமலையயுடையவருமாகிய சிவபெருமானது,—அரா சுமை இடப்பு ஆக அரி தேடு அடி உற - ஆதிசேஷனுக்குச் சுமையாகிய இப்பூவுலகமானது பிளவுபட விஷ்ணுமூர்த்தியினால் தேடப்பட்ட திருவடிகளிலே பொருந்தும்படி,—தூ மலர்கள் தமை இட பாகம் மருவுவரேல் - சுத்தமாகிய புஷ்பங்களைக்கொண்டு அருச்சிக்கப் பரிபக்குவத்தை அடைவாராயின்,—அவர் தங்களை பாரம் மையிடம் பாகன் அணுகான் - அவர்களைப்பிடிக்கும்படி,கனத்த எருமைக்கடாவைச் செலுத்தும் இயமனானவன் கிட்டான்,—உதை நினைந்து அஞ்சுவன் - (முன்பு உதைத்த) உதையைநினைத்துக்கொண்டு பயந்தோடுவன். எ-று. முதுகுன்றுடையன் அடி என இயையும். (கஅ)

அஞ்சுவணத்தைவரன்முறையோதவரக்கெறிந்த
பஞ்சுவணத்தைமருவுமென்குளுமைபாகமொடு

செஞ்சுவணத்தையனைய நின்கோலமென் சிந்தையுற
விஞ்சுவணத்தைமகிழ்குன்றைவாண விரும்புவனே.

(இ-ள்.) விஞ்சு உவணத்து ஐ மகிழ் குன்றைவாண - மேம்பட்ட கருடவாகனத்தையுடைய விஷ்ணுமூர்த்தியானவர் விரும்பிவணங்கும் பழமலைநாதரே,—அஞ்சு வணத்தை வரன்முறை ஓத-பஞ்சாக்ஷரத்தைக் கிரமப்படியே உச்சரிக்கவும்,—அரக்கு எறிந்த பஞ்சு வணத்தை மருவும் மென் தாள் உமை பாகமொடு - செந்நிறத்தை வீசுகின்ற பஞ்சினது அழகைப்பொருந்திய மெல்லிய திருவடிகளையுடைய உமாதேவியார்பொருந்திய இடப்பாகத்தோடு,—செம்சுவணத்தை அனைய நின் கோலம் என் சிந்தை உற விரும்புவன்- சிவந்த பொன்னைநிகர்த்த தேவரீருடைய திருமேனி என்னுடைய மனதிலே எக்காலமும் நிலைபெறவும், ஆசைப்படுகின்றேன். எ-று. வர்ணம் என்பன வணம் என நின்றன. (கூ)

விருத்தாசலாசங்கராமலைமாதுவிழிகளிக்கு
நிருத்தாசலசந்திரன்போலுடம்பிடைநின்றவர்தங்
கருத்தாசலசம்பவமிலர்க்காண்டறங்காட்டியசொற்
றிருத்தாசலசந்தமியேன்றலைக்குன்றிருவடியே.

(இ-ள்.) விருத்தாசலா - பழமலையையுடையவரே,—சங்கரா-சுகஞ்செய்பவரே,—மலை மாது விழி களிக்கும் நிருத்தா - உமாதேவியாருடைய கண்கள்களிக்கும் நடனத்தை யுடையவரே,—சலம் சந்திரன் போல் உடம்பிடை நின்றவர்தம் கருத்தா-சலத்திற்காணப்படும் சந்திரன்போல தேகத்தின்கண்ணேநின்ற மெய்ஞ்ஞானிகளுடைய கருத்தரே,—சலம் சம்பவம் இலர்க்கு ஆண்டு அறம் காட்

டிய சொல் திருத்தா - பொய்யாகிய பிறவியை ஒழித்தவர்களாகி ய சனகாதிகளுக்குக் (கைலைமலையிலே கல்லாலவிருக்ஷத்தினடியி லே) சகலதருமங்களையுமுணர்த்திய சொற்றிருத்தமுடையவரே,— தமியேன் தலைக்கு சலசம் உன் திருவடியே - அடியேனுடைய சிர சிலணிதற்குரிய தாமரைமலராவன தேவரீருடைய திருவடிகளே யாம். எ-று. சந்திரன் சலத்தினிடத்தே பிரதிபலித்துக் காணப்ப டினும், அதில் சம்பந்தமில்லாதிருத்தல்போல; ஞானிகளும் உடம் போடுகூடிநிற்பினும், அதிற்பற்றற்று உடையானிடத்தே பற்றுடை யரா யொழுகல்பற்றி, சலசந்திரன்போ லுடம்பிலடங்கின்றவர் தங்க ருத்தா என்றார். சொல்லாலுணர்த்திய அறங்களையெல்லாம் குறிப் பாற் றிருத்தினமைபற்றி சின்முத்திரையைச் சொற்றிருத்தமென் றார். அச்சின்முத்திரைக்குப் பொருளாவது மும்மலம் வேறுபட் டொழிய மெய்த்துயிர் அம்மலர்த்தாணிழலடங்கும் என்பது. திரு வடியே என்னும் ஏகாரம் பிரிநிலை. (௧00)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவப்பிரகாசசுவாமிகள் திருவடிவாழ்க.

உ

கணபதிதுணை.

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௭ | ௯ | பழலை | பழமலை |
| ௧௮ | ௨ | விழ | விலக |
| ௨௧ | ௧௨ | யுடைவ | யுடையவ |
| ௨௬ | ௧௬ | வாவம் | வாகும் |
| ௨௭ | ௪ | கைளு | கைகளு |
| ௩௫ | ௧௨ | துதிக் | துதிக்கவிளங் |
| ௩௬ | ௧௮ | தையும் | தைத் |

உ

கணபதி துணை.

# பிரசித்தபத்திரம்.

---

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னபட்டணம் தண்டையார்பேட்டை திருவொற்றியூர் ஹைரோட்டு 279-வது நெம்பர் வீட்டில் நம்மிடத்திலும், சென்னபட்டணம் முத்தியாலுபேட்டையில் கலாரத்நாகர அச்சுக்கூடத்தலைவராகிய ம-ா-ா-ஸ்ரீ, உ-ை- புஷ்பரதசெட்டியாரவர்களிடத்திலும், சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியாசாலை மானேஜர் ம-ா-ா-ஸ்ரீ, பொன்னுசாமிப்பிள்ளையவர்களிடத்திலும், சிதம்பரம், ஸ்ரீசபாநாயகர் திருவனந்தல் காலைசந்திக்கட்டளை ம-ா-ா-ஸ்ரீ, கந்தசுவாமிமுதலியாரவர்களிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.

விலை அணா - ௰. தபாற்கூலி அணா - ௨.

இங்ஙனம்,

க. வ. திருவேங்கடநாயுடு.

உ

கணபதிதுணை.

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மையபாளையம்

சிவஞானபாலையதேசிகராதீனத்து

நல்லாற்றூர் அல்லது துறைமங்கலம்

# சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# இஷ்டலிங்கவபிஷேகமாலை

முதலிய பிரபந்தங்கள்.

---

இவை,

ஷை ஆதீனத்துச் சிதம்பரம்

**இராமலிங்கசுவாமிகளால்**

பரிசோதிக்கப்பட்டு,

கரயாறு

ஞானசுந்தரஐயராலும்

பாளையம்

சோமசுந்தரசெட்டியாராலும்

சென்னை:

மிமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

பார்த்திப௵ ஆவணிமீ.

௨

க. அபிஷேகமாலை.

உ. பெருங்கழிநெடில்.

ந. குறுங்கழிநெடில்.

ச. நிரஞ்சனமாலை.

ரு. கைத்தலமாலை.

விலை அணா - க.

உ

சிவசண்முகன்றுணை.

# இஷ்டலிங்கவபிஷேகமாலை.



பந்தமறுமார்பிருடர் பலருருத்திரர்களொரு பதினெரு
வர்மிளிர்பீடமேற், படியிலையவகைப் படுமீசர்தாநிதம் பத்
திலெண்வித்தையிறைவர், சந்தமுறுகோமுகத் தைங்கலைகள்
சத்திசா தாக்கியமூர்த்திவதனங், சட்டற்றவட்டத்தி லொட்
டற்றசிற்சத்தி தாளுற்றநாளத்திலே, நந்தலறவருகோளக
ந்திகழ்சிதம்பர நற்சிகையினிற்குனிய, நட்டமறவமைகின்ற
விட்டவடிவொடுநின்ற ஞானமயமோனநடுவே, டந்தமற
முந்துபர மானந்தநிந்த வபிடேகமாடியருளே, யறிவுற்றெ
ணங்கைமலர் செறிவுற்றமர்ந்தவிறை யபிடேகமாடியருளே.

நாடரியசத்தியோ சாதத்தும்வாமத்து நன்றுமகோரத்தி
னு, நவையற்றபுருடத்து மாகமமொராவ்வைந்து நீல்கியீ
சானத்திலே, பீடுதருமெட்டுமுறை தந்தவற்றிடைநீசொல்
பெருமைபெறுமருமைவிதியிற், பேசரியபூசைசிவ கோசரி
யெனப்புரிதல் பெற்றிலேன்மற்றடியனேன், வேடுவர்குலத்
தலைவன் மெய்யன்புபூண்டிலேன் கேட்டொருவர்மாட்டரு
ளிறைன், மீக்கொளொருபுடையொப்பு நோக்கிவைத்தனைசா
ற்றின் வேண்டல்வேண்டாமையிலையா, லாடுநின்பால்வேறு
பாடொன்றிலாமையா லபிடேகமாடியருளே, யறிவுற்றெண
ங்கைமலர் செறிவுற்றமர்ந்தவிறை யபிடேகமாடியருளே. (உ)

நவிற்றலருமிதயமினிர் கண்டாவடிபுருவ நடுவுபிரமப்பு ழையென, நல்லிடத்தகராதி கிரியாதிமனமுதல நண்ணியு மைம்மூவகை, யிவற்றிலொவ்வொன்றகல நின்றவிடயங்க ளெதிர் வின்றிச்சிவாகாரமா, யெதிருநனவுஞ்சோக மென்று பாவித்தலுறு மென்கனவுஞாதுருவொடே, யுவப்பறிவுஞேய மென வுற்றனுபவித்திடு மொண்சுழுத்தியுஞானமே,யொளிர் அரியமுந்திலைத் துயர்சிவானந்தநுகர் வுறுமதீதமுமாகுநல், லவத்தைகள்கடந்தவற் றப்புறப்படுமமல னபிடேகமாடியரு ளே, யறிவுற்றெனங்கைமலர் செறிவுற்றமர்ந்தவிறை யபி டேகமாடியருளே. (௫)

ஒருவனோர்பொருளிலாற் குற்றுதவினுளம்வியந் தொகை பெறுமன்றியுடைமை, யுதவுருவமையத்தி லுதவினுந்தன்னி டத் துள்ளதிற்பெரிதளிக்கும், பொருளதாயினுமதனி னினிய தாயினுமவன் புந்திமகிழ்வுற்றிடுவனல், புனல்விடுத்திடுமுடி யி னிற்புணரியிற்பெருகு புண்ணியத்தெய்வநதிதான், மருவ லானீர்விருப் பிலைநிளக்கொருதிவலை மற்றென்முடியிற்றெறி ப்பின்,வைப்பன்வானத்தினென வெத்திறத்தானுநினை மக்க ணினைவுற்றுயந்திட, வருளினன்முனம்விதித் தவனுதலான்ம கிழ்ந் தபிடேகமாடியருளே, யறிவுற்றெனங்கைமலர் செறி வுற்றமர்ந்தவிறை யபிடேகமாடியருளே. (௬)

கருகிச்சிவந்தகடு வருகிப்பொருந்தமினிர் களம்வாழ்வு மேவவணிவாய், கடலிற்சிறந்தநிற வுடலிற்றிருந்துமணி கதி ர்போலமேயுநெடுமா, லொருகட்கிசைந்தவடி யிருகட்கிணை கைவற முடையார்முனேடிவருவா, யுலகத்தைவென்றமன மிலகுற்றமன்றினிடை யுமைகாணவாடல்புரிவாய், மருகற்

பெரும்பதியி லொருகற்பணங்கூறுதொழ மணவாளனுவியந்து வா, மயிலைக்கணென்பினுயிர் பயில்வுற்றெழுந்துவர வருவா யெனுமுனைமழையா, வருகர்க்கணங்கூற்று முருகர்க்குகந்தவ ரனபிடேகமாடியருளே, யறிவுற்றெனங்கைமலர் செறிவுற் றமர்ந்தவிறை யபிடேகமாடியருளே. (௫)

ஓகைமலிகுருவாணை யுறுவிக்குமாணையு முயர்புராதனசரி தமோ, டொக்குநடைவருவிக்கு முவமையுந்தன்மகனை யொண்சுவத்திகமேற்றுபு, சோகமறுமனுமயஞ் செய்தமைத்திடுமொரு சுவத்திகாரோகணமுநூல், சொல்லியவிடங்களிற் றூயநீறணிதருந் தொல்விபூதிப்பட்டமு, மாகலசந்ராட்டுக லசாபிடேகமு மருவுசிவகோக்குவிக்கும், வயங்குலிங்காயத மு மன்னுசிவலிங்கமுரு வனைசுவாயதமுமெனுமே, மூதுநெ றிதான்மருவி யாகமிசையிலகுமர னபிடேகமாடியருளே, யறிவுற்றெனங்கைமலர் செறிவுற்றமர்ந்தவிறை யபிடேகமாடி யருளே. (௬)

போயகுலமொடுசரண ரொடுமேவுசமயமும் பொன்றுல கம்மிட்டமலனார், பூசனைகொளரியகிச் சஞ்சாரமுங்கொடிய பொன்பெண்மண்ணாசைநெறியிற், பாயமனமோடாத நிட்பி ராணமுமெய்ம்முப் பத்தாறுதத்துவமறப், பகுதியொடுணர் த்துதத் துவமுமிறையஞ்சனி பாவொன்னுமான்மிகமுமே, மே யசடுலிங்கமுட னறங்கமாகுமொருமெய்யனுக்கிரகநிலையும், விமலமுறுசச்சிதா னந்தசிவமயமென்னு மிக்கசத்தியசத்த மு, மாயவெழுவகைநெறியி னுவியிடையிலகுமரனபிடேகமா டியருளே, யறிவுற்றெனங்கைமலர் செறிவுற்றமர்ந்தவிறை ய பிடேகமாடியருளே. (௭)

கிடைத்தசிவலிங்கமன் றுணராதவேகாக் கிரசித்தமென் னும்விரதம், கெடாததிடவிரதம்விட யங்கள்சிவனுக்குதவு கின்றவிந்திரியார்ப்பித, முட்டற்றியுயிர்கொன்றிடா கின்றிடும கிஞ்சைசிவ னுண்மைகொளிலிங்கநிசமே, யுயர்சிவத்துளம டங் குறுமனோலயமதனி லொன்றாகிநின்றுபேதம், விடுத்த லாறுசத்தியோன் முத்தியெனுமிவையேமு மிக்ககுருவருள் புரியவே, மேவலருமெய்ஞ்ஞான பாவநிலைமேவியிடும் வேத முடியாவுமுணரா, தடுத்தமனமொழியுடற் கப்புறப்படுமமல னபிடேகமாடியருளே, யறிவுற்றெனங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை யபிடேகமாடியருளே. (௮)

நல்லதிலநெய்யாடி யானிடத்தைந்தாடி நவையிலையமுத மாடி, நல்குகாரணகாரி யம்முறையினன்றியே நறுநெய்பா றயிராடியே, மெல்லமலர்மதுவாடி யின்கழைச்சாறாடி மென் பழச்சாறாடியே, விழையுமிளநீராடி யாரக்குழம்பாடி விதியி னமைநபனமாடி, யொல்லைநகுவெண்டலைப் புழையினிடை யோடிநல் லுத்திகொடுபைத்தலைய, வுரகநுழைவுறவிளங் குழவிமதியொருபுடை யொதுங்கவிடமின்றியசைய, வல்லல றநிறைகங்கை யசையாதுநிற்பைநீ யபிடேகமாடியருளே, யறிவுற்றெனங்கைமலர் செறிவுற்றமர்ந்தவிறை யபிடேகமா டியருளே. (௯)

நார்கடமினரசரவர் தமினியதிவவியாழ் நண்ணுநரகந்த ருவர்தா, நவிலுமவர்தமினமர கந்தருவரவர்தம்மி னுடரிய தேவரவரிற், சுரரதிபனவனினுயர் சுரர்குரவனவனினயன் சொன்முறையினூறுமடிமேற், றுன்னுசுகமொருநிவலை யள வுமின்றுகமிகு சுகவேலைபுகலீகுவாய், தரைமுதற்பூதங்கள்

புத்திகுணதத்துவந் தகுதிபெறுபகுதிபுருட, தத்துவம்வித்தைமுத லனவெனுமிவற்றிலறு சமயரொனவெமைவிடாம, லருளினிணையடைதலுறு மரியபதமருளுமவ னபிடேகமாடி யருளே, யறிவுற்றெனங்கைமலர் செறிவுற்றமர்ந்தவிறை யபிடேகமாடியருளே. (௧௦)

அபிஷேகமாலைமுற்றிற்று.

---

# நெடுங்கழிநெடில்.

பெருகுறு மன்பாற் பூசனை புரிந்த பிணங்குநூற் சிலம்பி வெவ் வரவம், பிறைமருப் புறக்கால் யானையென் றிவற்றின் பிறவியோ விதழ்முறுக் கவிழ்ந்து, முருகுமிழ் நறுமென் மலர்புனைந் துன்னை முற்றும்வந் தனைபுரி யாமன், முகிழ்முலை மகளிர் மயலிடை யழுந்து மூடர்தம் பிறவியோ நல்ல, திரைபொருங் கங்கை யுவட்டெடுத் தொழுகுஞ் செஞ்சடை மிசையொரு துளிநீர், தெறித்தவர் தமையு நறவுகொப் பளிக்குஞ் செழுமலர்க் கற்பக வேந்து, மெரிபுரை யிதழ்ச்செங் கமலநான் முகனு மெய்தரும் பதத்தில்வைத் தருள்வோ,யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே()

கட்டழ கமைந்த காளையம் பருவங் கடந்திடா துள்வலி யுடைத்துக், கலங்கல்செய் பிணியின் றியன்றயாக் கையராய்க் கல்வியங் கடல்கடந் தவராய், நட்டவர் விரும்பு மாறுநீ செய்ய நடக்குநா ளுடல்வெறுத் துனையே, நம்பியா ரூரன் முதலியோர் நண்ணு நாளுடல் விடுமென வழிவேன், பட்டி

ருள் விழுங்க வலர்கதி ரவனும் பனிமதி யோடுயிர்த் தொ கையும், பார்புனல் சுடுதீ வளிவிசும் பென்னப் பட்டவைம் பூதமு மாகு, மெட்டுரு வடைந்து முருவமொன் றின்றி யிற றென வுணர்வரும் பொருளே, யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே. (உ)

மனமெனும் வயமா வென்வயப் படாமன் மயங்குறு மைம்புல வீதி, மறிபடா தோடு கின்றது முறையோ மறித்ததை நிறுத்தியென் றனக்கு, நினையல துதவு வாரிலை யதனு வினைப் பரவுற்றன னதனை, நிறுத்திநீ யிவர்ந்து பின்னர்நீ வேண்டு நெறிகளிற் சென்றிட விடுவாய், கனலுறு மெழுகி னெஞ்ச நெக்குடைந்து கரையில்பே ரன்பெனும் வெள்ளங், கண்வழி புறப்பட் டென்னநீர் வாரக் காலங்க டொறும்வழு வாம, லினமலர் தூவு மடியவ ருள்ளத் திருள்கெட வெழுந்த பே ரொளியே,யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே. (ங)

இலங்கடந் தவன்முன் னறுமலர் சாத்த நிகரிலம் மூர்த்தி முன் சர்ந்து, நினக்கணி வுறவாட் டாயர்முன் னிருந்து நிவே தனம் புரிந்திட வன்று, நலங்கிளர் கலையர் கலியர்முன் றூப நல்விளக் களிப்பநின் றன்னை, ஞானசம் பந்தப் பிள்ளைமுன் பாட நாணிலேன் பூசனை புரிவேன், விலங்கினுங் கடையர் வளர்த்தசெந் தீயின் விரைந்தெழும் வாள்வரி வேங்கை, விடுப்பவங் கதுவந் தெதிர்ந்திட விகழ்ந்த விடாததன் றோலுரித் திருள்கொண், டிலங்கொளி யிரவி யனையமெய்ப் படுத்த விறைவனே யநிட்டநின் றகற்றி, யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே, (ச)

மூக்கிடை யிரண்டு விழிகளே றுதன்முன் முடங்குகைக் கோலொரு காலா, முன்னநின் றிருவாய் மலர்ந்தருள் செய்த முதிர்கலைப் பொருளீபடித் தவராய்க், கார்க்கடன் முகட்டி னிரவிவந் தெழுமுன் கடிதுசென் றணிமலர் கொய்துன், கழற்கிடார் பிறப்பி னுய்ப்பிறப் பினிது கற்றவ ரிகழ்ந்திடாமையினு, ளுக்கற நோக்கு முருவமே நாவா னுகர்ந்திடா வினியபே ரமுதே, நுதல்விழிக் கனியே கறைமிடற் றரசே நுவலரு மாயையிற் பிறவா, யாக்கைய துடைய வருட்பெருஞ் சட்டலே யெழுந்தொடுங் காதவான் சுடரோ, யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே. (௬)

திருக்குறு மழுக்கா றவாவொடு வெகுளி செற்றமா கியமன வழுக்கைத், தியானமென் புனலாற் போய்புறங் கூற றீச்சொலென் கின்றவா யழுக்கை, யருட்கிளர் நினது துதியெனும் புனலா லவத்தொழி லென்னுமெய் யழுக்கை, யருச்சனை யென்னும் புனலினாற் கழுவா வசுத்தனே னுய்யுநா ளுளதோ, விருப்பொடு வெறுப்பிங் கிலாதவ னென்ன வெண்மதியோடுவெண் டலையும், விரைவழி புகுந்து வண்டினம் பசுந்தேன் விருந்துணுங் கொன்றைமென் மலரோ, டெருக்கையு மணிந்து மின்னொளி கடந்த வீர்ஞ்சடைப் பரமனு னுடையா, யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே. (௭)

சிவமுட னமூர்த்தி மூர்த்திகர்த் திருவஞ் செயன்மலி கருமமென் றருநூல், செப்புதத் துவமுஞ் சதாசிவ னீசன் றிகழ்தரு பிரமனீ சுரனோ, டுவமையி லீசா னப்பெய ரவனென் றுரைத்திடு மூர்த்திக டாமு, முற்றவீ சான முதற்பிர பாவமு

டையநின் றன்னையென் றுணர்வேன், புவிமுத லனைத்து மா க்குத லளித்தல் போக்குத லுயிர்வினை யருத்தல், புதிதுறச் செம்பிற் களிம்பென வறிவைப் புணர்மல மகற்றுத லென்னு, மிவைபல வியைந்தும் விகாரமொன் றின்றி யிரவிபோ லின்றகா ரணனே, யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே. (எ)

தான்பெறு மழலை மொழிமகன் றன்னைத் தன்கையா லுளங்களித் தரிந்து, சமைத்துல கறிய விடுபெருந் தொண்டன் றனைச்சிறுத் தொண்டனென் றவன்சே, யூன்பெறு நீயே யுரைத்தனை யென்று லுரிமையோர் சற்றுமி லாதே, னுன்றிருத் தொண்ட னென்றிருப் பதனுக் குன்னுதல் பெரும்பிழை யன்றோ, தேன்பெறு நளின மலர்களா யிரத்தோர் செழுமலர் குறைபட விரைந்து, செங்கணென் றிடந்து குறையற நிரப்பித் திருமறைச் சிலம்படிக் கணியா, யான்பெறு நிதியே யென்றுல களந்தோ னேத்திநின் றிறைஞ்சுறு மமுதே, யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே (அ)

நின்புகழ் பாடும் பாணனார் தமக்கு நிதிதரச் சேரலன் றனக்கு, நீமுன முடங்க லொன்றளித் தருபோ னிகரிலா வசவனா யகன்ற, னன்பினி லொருநூ றுயிரங் கூறிட் டடுத்தகூற் றினிலொரு கூறிங், களிப்பதற் குனது திருமுக மருளா லடியனேற் களிக்குநா ளுளதோ, பொன்புரை கடுக்கை மலர்ந்தசெம் பவளப் புரிசடைப் பேரருட் குன்றே, புணர்முலைக் கயற்கட் பிறைநுதற் கனிவாய்ப் பொற்றொடி யிடத்துவா ழமுதே, யென்புமெவெண் டலையு மணிந்துநான் புனித னென்று

மென் றிருத்திடு பவனே, யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே. (கூ)

வங்கையர் முத்த சங்கையர் சென்ன வசவண ரசகணர் வீர, மாச்சையர் பிப்ப பாச்சையர் வள்ள மல்லையர் கல்லைய ரெங்கள், சங்கண வசவ ராசையர் சேட தாசையர் சங்கர தாசர், சவுண்டைய ரென்றிங் கிவரடிக் கேவ றலையினுற் செய்யுநா ளுளதோ, பங்கய மலரோ டரிவிழி பரித்த பதமலர் சிவப்பவே நெடுங்கட், பரவைதன் மனைக்கட சுந்தர னேவும் பணியெலா முனிவற வியற்றி, யெங்கணும் விளங்க நம்பியா ரூர னேவல னெனப்படு மிறையே, யிட்டநன் குதவி யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே. (க0)

நெடுங்கழிநெடில்முற்றிற்று.

---

## குறுங்கழிநெடில்.

பொன்செய்வா ணிகர்போ லெவ்வழி யானும் புண்ணிய மீட்டினு மறிஞர், கொன்செய்பா தகமே புரிந்தன னின்றுள் குறுகுவ தென்றென விரங்கு, முன்செய்தீ வினையோ கனவிலு மறமே மொழிகிலேன் களித்திருக் கின்றே, னென்செய்கோ மறலிக் கென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே()

மென்னிழற் றருவை யடைபவர் தம்மை விடாநிழல் விட்டிடு மாபோ, னின்னடிக் கமல மடைந்திடிற் றொடர்ந்து நீங்கலா வினையுநீங் குறுமே, கன்னலிற் கனியிற் சுவைதரு மமுதே கண்மணி யேயருட் கடலே, யென்னுயிர்த் துணையே யென்கரத் திருக்கு மீசனே மாசிலா மணியே. (உ)

குருவாகி முத்தனு விற்கிரி யாதிகள் கொண்டொருமூன்
றுருவாய் மலமொழித் தாவிகண் மூவங்க மாவருளி
யொருவாது தான்முதன் மூப்பொரு ளாகி யுங்குநிற்குந்
திருவாரு மென்கைத் தவிசிடை மேவுஞ் சிவலிங்கமே. (உ)

என்னை யறித லினையறி கின்ற வியல்பதென்று
தன்னை யெனைவிட் டறிவான் றொடர்த லொருவனிழ
றன்னை யடியின் மிதிப்பான் றொடருந் தகைமைத்தன்றோ
பொன்னை நிகர்செஞ் சடைக்கற்றையென் கைப்புராந்தகனே.

தன்பொரு ளென்ப நினைப்பிறர் தம்பொரு டாவரமா
மென்ப னறிந்து முயிர்க்கே ளிருப்பவு மேதிலர்மெய்ப்
புன்புணர் வெஃகு மடமாதி னின்னிற் புறந்திரியு
மன்பறு மென்பவம் போமேயென் னங்கை யமர்ந்தவனே.

அங்கையி னெல்லி யெனவந்தெ னங்கை யமர்தவிளந்
திங்களங் கண்ணி நினையன்றிப் போய்ப்பிற தெய்வந்தொழ
கொங்கவிழ் பூந்துணர்க் கற்பக நீழற் குடிமுனிந்து [ல்
பொங்கெரி வெந்நிர யத்தா டிருப்பப் பொருந்துவதே. (ரு)

சித்தி நிரஞ்சனத் தச்சு ளியத்துச் செயலுளாதிர்
நித்த வநாதி சரணன் சரணனந் நிட்களத்தே
யத்தனி மாலிங்க மாதியி ருனயிக் காதிகளாய்
மெய்த்த வுனையென்று நீங்கேனெ னங்கை விடாதவனே. ()

கண்ணி விரவி செவியிற் றிசைநின் கருத்தின்மதி
யொண்ணுத விற்கனல் வானுத ரத்தி லுயிர்ப்பில்வளி
வண்ண வடியிற் புவியிந் திரனயன் மால்புயத்தி
லண்ணல் வதனத் தரன்றோன் றுமென்கை யமர்ந்தவனே.

காயங் கரணநற் பாவ மறிபவன் காணறிவு
ஞேயங்க ளாகி முதனடு வீறி னினக்கயலே
யாயிங் கொருபொரு ளர்ப்பிப்ப லென்ப தவிச்சையன்றே
பாயுஞ் சினவிடை யொன்றூரு மென்கைப் பரஞ்சுடரே.(௮)

சத்தங்க லிங்கங்க ளாயே நிகழ்ந்தது சத்திபத்தி
சித்திங் கடைந்தது சைமுக வர்ப்பித சேடங்களாய்
மெத்தன் றிலங்குநின் றுணர்ந்த மேயென் விழிகளிப்பக்
கைத்தங்கு செம்பொரு ளேயருள்காட்டுங்கறைக்கண்டனே.

வான்குறித் தெய்யுங் கணைநுதிக் கேநிற்கும் வானெனவே
யான்குறித் தெய்தப் புகுமறி வின்க ணிருத்திகண்டாய்
கூன்குறித் திங்கட் சடையாய் மகரக் குழைதடவு
மான்குறிக் குங்க ணுமைபங்க னேயென்கைம் மாணிக்கமே.

பிரமமுந் தானு மயலென் றருச்சிக்கும் பேதநிலை
தருமம் மயலற நாளுகி நின்றனை தான்சிவமென்
றருமை வினையி லபேதம் புகாம லருச்சிக்குமா
றிருமை வடிவுகொண் டுற்றாயெ னங்கை யிறையவனே.(கக)

கோலந் தருமடி நாப்பண் விருத்தநற் கோமுகமா
ஞாலங் கருதருங் கோளகந் தம்மி னயந்தடியேன்
சீலங் கொளுமரு ளாசார மாதி திகழ்ந்துநிற்கு
மூலங் கரணங் கலந்தங்கை மேவிய முக்கண்ணனே. (க௨)

மண்ணும் புனலுஞ் சுடுசெழுந் தீயும் வளியுமகல்
விண்ணும் படைத்து விளையாடிக் காக விழியிரண்டு
நண்ணுங் கருமணி யொன்றென வேபவ நாசமுறக்
கண்ணுங் கருத்துங் கலந்துநின் றாயென்கைக் கண்ணுதலே.

நாக மெனவும்பின் கோக மெனவுமெய்ஞ் ஞானத்திறற்
சோக மெனவுஞ் சொலுமறி யாமை தொலைத்தொருநீ
யாக முழுது நிறைந்துநின் றுய்நல் லருட்கடலே
யாக மொருபெண் குடியாகு மென்கைப் பரஞ்சுடரே. (கசு)

ஒன்றிரண் டாயவை பற்பல வாகி யுதித்தமுறை
சென்றிரண் டாகிப்பின் னொன்றாகி நிற்குஞ் சிவமொடங்க
மென்றிரண் டாக வுரைப்பார் நினைதிய லெய்திலர்காண்
மின்றிரண் டாலன்ன மேனிய னேயென்கை வித்தகனே. ()

உறங்குத மென்றுறங் காநிற் பவரிலை யோங்கொளியாய்ப்
பிறங்கு முனையடைந் தோமென் றிருப்பது பேதைமைகா
ணிறங்குணி போல வெனைக்கொண்டு நின்ற நிலையினின்று
புறம்பக மொன்று மிலாதென்கை மேவும் புராந்தகனே (கஎ)

குருவிற் குதவு முடல்சரத் திற்குக் கொடுத்தலுறு
திருவிற் றிசமு நினக்கே தருமனஞ் சேயரிக்கட்
பொருவிற் புருவ மடமாதர் தம்மிடைப் போக்குறுமென்
கருவிற் கொழிவுள தோகர பீடத்தெங் கண்ணுதலே. (கஎ)

துயிலினும் போகினு நிற்கினும் வீழினுஞ் சொல்லினுமொன்
றயிலினுங் காணினுங் கேட்பினும் வாழினு மல்லலொடு
பயிலினுஞ் சோரினுந் தேறினு நீக்கினும் பற்றினும்பொய்
குயிலினுஞ் சோம்பினு நிற்கடவேனென்கைக்கொற்றவனே.

ஓடுந் தனமும் புகழும் பழியு முயர்விழிவுங்
கேடுந் திருவு மமுதமும் பற்கையுங் கேள்பகையும்
வீடுங் குடியு மகளீரு மன்னையும் வேறறவே
நாடுங் கருத்துஃ ருமோ வெனக்கென்கைந் நாயகமே. (கக)

பாடு மவனுமொண் பாட்டுமெப் பாடப் படுபவனு
நாடு மளவினி னீயன்றி வேறிலை நான்முகன்மா
றேடு மருமருந் தேயமு தேயிளந் திங்கண்முகிழ்
சூடு மணிவிளக் கேகர பீடத்திற் றூயவனே. (உ0)

இல்லாள் புதல்வ ரனைதந்தை பொன்மண் ணிடைவிழைவு
செல்லா மருளு மயறீர்ந் துநின்கழல் சேர்ந்துனக்கே
யெல்லா முதவுநற் சித்தத் துறைந்வை யென்கையுள்ளாய்
நல்லார் புகழ்தரு மாசார லிங்கமென் னுமமுற்றே. (உக)

பழியாம் பிறர்தம் பொருண்மனை வேட்கை பரதெய்வமோ
டொழியா வருடரு மட்டா வரண முவந்துகொண்டே
யழியா துயருநற் புத்தி யெனுங்கை யமர்வைகண்டாய்
மொழியா வருங்குரு லிங்கமென் றேயென்கைமுன்னவனே.

விடயங் களினண்ணி யானென தென்னு மிகையொருவி
யடையும் புலனினக் காக்குந் தவிரகங் காரப்பெய
ருடையங் கரமிசை நற்சிவ லிங்கமென் றுற்றனைகாண்
புடையம் பிகையொ டமர்வாயெ னங்கைப் புராந்தகனே.()

நில்லா தியங்கும் வளியொடு கூடி நிலையழிந்தே
புல்லா விடயத் தலமர னீங்குபு பொய்யினெறி [ளாய்
செல்லா தொளிர்நன் மனத்தே யிருத்தியென் செங்கையுள்
கல்லா ரறிவருஞ் சங்கம நாமங் கடைப்பிடித்தே. (உச)

உடம்பு சதிபதி தானுய் விடயங்க ளுண்டுழலா
தடங்கு சதியொரு தானுகி நீபதி யாகவுனைத்
தொடர்ந்து நுகருநன் ஞானக் கரத்திடை தோன்றுவைமாசு
கடந்து வருபிர சாதமென் றேயென்கைக் கண்ணுதலே. ()

யாரு ரடிமை சிவனே யிறையென் றிருப்பது போய்
நீநா னெனப்படும் பேத மிலாமை நெறியுதவு
மாறு துயர்ந்தசற் பாவத்து மாலிங்க மாகிநின்றாய்
வாறு டரியவ னேகர பீடத்து மாணிக்கமே. (௨௭)
உலகிய றன்னை யொருவாது பற்று முளத்தொளியா
யிலகிய நின்னைத் தெரிப்ப தொருவற் கெளிதுகொலோ
இலைகவர் கையில் விளங்காய் பிடித்தல் செயுமவர்யார்
விலகுதின் றோளணி கொண்டவ னேயென்கை வித்தகனே.
ஆனந்த வாரிதி யாகிய நீகை யமர்ந்திருப்ப
நானந்த தீவிட யந்தேடிச் சென்றுண்டு நைந்தழிதல்
வானந் தமுதங் கரத்தே யிருப்பதை மாற்றியருந்
தீநஞ் சருந்துத லன்றோ நிரஞ்சன சின்மயனே. (௨௮)
உருவஞ் சுவைநிறை வாகிய மூன்று முவந்துகொண்டு
மருவங்க முள்ள முருவக லாதுள்ள வாறுநின்றா
யருவன் றுருவன் றருவுரு வன்றி யறிவுருவாய்க்
கருவிவன் றுலகம் படைத்தாடு மென்கைக் கறைக்கண்டனே.
கிள்ளேன் சிறிய ரினம்பெரி யோரை விரும்பியென்று
நள்ளேன் பிறர்மனைப் போக்கொழி யேன்மெய்ந் நடுநடுங்க
வுள்ளேன் றிருவடி நீழலி லென்னெஞ் சுருகிநையேன் [னே.
றுள்ளேன்றெடும்புசெயேனென் செய்கேனென்கைத் தூயவ
அழியும் பொருள்கொடுத் தேசங் கமத்திற் கழிவில்பொருள்
பழியும் பவமு மிலாதெய்த லாயும் பயனிலவாய்க்
கழியும் படிநெடு நாணீத் தமுதங் கமருகுத்தேற்
கொழியும் பவமுள தோகர பீடத் துறைபவனே. (௩௧)

நிரஞ்சனமாலைமுற்றிற்று.

---

# கைத்தலமாலை.

—:o:—

முன்ன மாலய னிந்திர னமரர்கண் முனிவர்
பன்னு மாரணம் போற்றுதற் கரியநம் பரமன்
மின்னு லாவிய சடாடவிக் கடவுள்வீற் றிருப்ப
வென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௧)

அன்ன மாயும்வெண் பிறைமருப் பேனமென் றுயு
முன்ன நான்முக னரணன் றேடரு முதல்வன்
பின்னு வார்சடைப் பெருந்தகை பீடமாக் கோடற்
கென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௨)

தன்னை மேவிவந் தனைபுரி பவன்செய றடுப்பா
னுன்னி மேல்வரும் வெந்திறற் கூற்றினை யுதைத்த
மன்னு மாலயற் கரியவன் வந்துவீற் றிருப்ப
வென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௩)

தன்னை நேர்வட காசிதென் கயிலைகே தார
மன்ன மார்வய லம்பல நமென்றமர் வராமற்
கன்னன் மாமதற் றெறும்விழிக் கடவுள்வீற் றிருப்ப
வென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௪)

கன்ன லாரமு தினுஞ்சுவை தருவதாய்க் காண்பா
னுன்னு மாலயற் கரியதா மொருமலை யுச்சி
மன்னு மோர்பவப் பிணிமருந் தெளிதுவந் திருப்ப
வென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௫)

அன்னை யாகியென் னுயிர்க்குயி ராமரு ளாளன்
பொன்னு மாரமு மணியுமா ரமுதமும் போல்வான்
றன்னை நாடொறுங் கண்டுகண் களிப்பதாச் சார்தற்
கென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௬)

அன்ன மூர்பவன் முதலியோ ரயயமென் றடைய
முன்ன மாலமுண் டவர்துயர் களைந்தருண் முதல்வன்
மின்னு மாமழு வலமுடை வீரன்வீற் றிருப்ப
வென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௭)

பன்னு மாமறை தமிழினாற் பாடுநம் பிக்குப்
பொன்னு மாடையு மணிகளு மூர்தியும் பொருளு
மின்னு மீபவ னருளினன் மேவிவீற் றிருப்ப
வென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (அ)

பின்னும் வார்திரைக் கடலின்வீழ்ந் தமிழ்கையிற் பிடிப்ப
முன்ன மோர்புணை யகப்படு முறைமைபோற் பிறப்பி
னின்னல் கூர்பொழு தெம்பிரான் வந்துவீற் றிருப்ப
வென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௯)

தன்னை யோர்பொழு திறைஞ்சுவான் கருதியித் தரைமேன்
மன்னு மாலயம் யாண்டுள தெனவல மராமற்
பொன்ன வாமலர்ச் சடையுடைப் புனிதன்வீற் றிருப்ப
வென்ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௧0)

கைத்தலமாலை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவப்பிரகாசசுவாமிகள் திருவடிவாழ்க.

உ

கணபதி துணை.

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மையபாளையம்

# சிவஞானபாலயதேசிகர் தாலாட்டு

முதலியபிரபந்தங்கள்.

---

இத்தேசிகர்மாணாக்கராகிய

நல்லாற்றூர் அல்லது துறைமங்கலம்

## சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்தன.

---

இவை,

ஷை தேசிகர் ஆதீனத்தில்

பதினான்காம்பட்டமாக இப்பொழுதுவிளங்கும்

**ஸ்ரீ@ஸ்ரீ சிவஞானபாலயதேசிகசுவாமிகள்**

கட்டளையின்படி

இத்தேசிகசுவாமிகள் மாணாக்கராகிய

சிதம்பரம்

## இராமலிங்கசுவாமிகளால்

பரிசோதித்து,

சென்னை:

மிமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

சர்வசித்து ௵ வைகாசிமீ.

௳

க. தாலாட்டு.
உ. நெஞ்சுவிடுதூது.
ரு. திருப்பள்ளியெழுச்சி.
ச. பிள்ளைத்தமிழ்.
ரு. கலம்பகம்.

---

சரித்திரத்துடன் விலை அணு - ச.

உ

கணபதிதுணை.

# சிவஞானபாலையதேசிகர்

# தாலாட்டு.



காப்பு. நேரிசைவெண்பா.

அவஞானம் போக்கி யருண்ஞான மாக்குஞ்
சிவஞான தேவன் றிருமுன் - றவஞானத்
தாலாட் டெனுந்தமிழைச் சாற்றுதற்கு நற்றுணையா
மாலாட்டு மாமுகத்தன் வந்து.



திருவருளா லென்னைத் தெரிவிக்க விங்குத்
திருவுருவாய் வந்த சிவஞான தேசிகனே. (௧)

என்றுநித்த பூரணமா யின்பவறி வுண்மையாய்
நின்றபடி நிற்கு நிகழ்பிரம மென்றானே. (௨)

தன்சத்தி யாலாந் தலமங்க லிங்கமென
வென்சத்தி பாதத் தெழுந்தருளிச் சொன்னானே. (௩)

நண்பாகு மிட்டலிங்க நன்றாம் பிராணலிங்க
மொண்பாவ லிங்கமா மோர்பொருளிங் கென்றானே. (௪)

ஆசார லிங்கமுட னாகுங் குருலிங்கந்
தேசாரு மிட்டலிங்கஞ் சேர்ந்தாகு மென்றானே. (௫)

அந்தப் பிராணலிங்கத் தாகுஞ் சிவலிங்க
மிந்தச் சரலிங்க மென்றசிவ ஞானியோ. (சா)

பாவலிங்கந் தன்னிற் பரமப் பிரசாதந்
தாவகன்ற மாலிங்கஞ் சார்ந்துவரு மென்றானே. (எ)

ஏகாங்க மேயாகு மின்பத் தியாகாங்கம்
போகாங்கம் யோகாங்கம் போற்றியறி யென்றானே. (அ)

பத்தனுமா யேசனுமாம் பன்னுந் தியாகாங்க
முய்த்துணரி னென்ன வுணர்த்தும் பெருமானே. (கூ)

பிரசாதி யோடு பிராணலிங்கி யாகு
முரைசாரும் போகாங்கமொன்றென் றுசொன்னானே. (க0)

சாற்றுமியோ காங்கஞ் சரண னயிக்கியனும்
போற்றிநீ காணென்று போதித்த தேசிகனே. (கக)

அங்க நவவிதமு மந்தநவ லிங்கமொடு
தங்கு மெனவெனக்குச் சாற்றும் பெருமானே. (கஉ)

விழுங்கல் பருகலொடு மெல்லலா சார
மொழுங்கிற் குருசிவமு முற்றிடுமிங் கென்றானே. (கஙு)

சோகிய லேகியமுஞ் சொன்ன விவற்றறிவு
மேகியுறும் பின்மூன் றிலிங்கத்து மென்றானே. (கச)

இந்தக்கா யார்ப்பணங்க ளிட்டலிங்கத் தென்றெனக்குச்
சந்தப் படவுரைத்துத் தந்தசிவ ஞானியோ. (கரு)

பீடமிடை வட்டம் பெருங்கோ முகநாள
மாடனுறு கோளகமா சாராதிக் கென்றானே. (கசா)

நாற்றஞ் சுவையுருவ நல்லூ றொலிநிறைவு
சாற்றுஞ் சடுலிங்கஞ் சாருமெனச் சொன்னானே. (௧௭)

வேர்முதலாங் கந்தம் விளங்கு மரமுதலாங்
கூர்மணமா சாரங் குருவினிலா மென்றானே. (௧௮)

தளிராதி கந்தமுகை தான்முதலாங் கந்த
மொளிரார் சிவசரத்தி னூற்றிடுமிங் கென்றானே. (௧௯)

காய்முதலாங் கந்தமெலாங் காசில்பிர சாதத்துந்
தூய்மலிமா லிங்கத்துந் துன்னுமெனச் சொன்னானே. (௨௦)

மதுரந் துவர்கார்ப்பு வண்புளிகைப் பெல்லாஞ்
சதுரொன் றிருத்தியவா சாராதிக் கென்றானே. (௨௧)

பொன்மைவெண்மை பச்சைமாஞ் சிட்டபோ தங்களெலா
நன்மையவா சாராதி நண்ணுமென்ற நாயகனே. (௨௨)

வன்மைமென்மை வெம்மைதண்மை வாய்ந்தமிசிரமெலாஞ்
சின்மையவா சாராதி சேர்ந்துகொளு மென்றானே. (௨௩)

கஞ்ச நரம்புதோல் கண்டகுழ லாதியொலி
யஞ்சொலிவை யெல்லாமவ் வாறூறு மென்றானே (௨௪)

மணமுதலா மைந்து வகைநிறைவெ லாமு
நணுமுறையா சாராதி நாடிலெனச் சொன்னானே. (௨௫)

இம்முறையா றூறு மிலங்குகா ணார்ப்பிதமென்
றெம்மறிவு கொள்ள வியம்புசிவ ஞானியோ. (௨௬)

தொட்டறிந்திங் கொன்றைத் துணிந்து நுகர்ந்துமகிழ்ந்
திட்டமைந்து நிற்கு மிலிங்கங்க ளென்றானே. (௨௭)

கூறுமிவை யாவினுமிக் கொள்கை பெறுமிலிங்க
மேறு மிரட்டுநூற் றெட்டாகு மென்றானே. (உஅ)

உருவஞ் சுவைநிறைவா யோங்கர்ப் பிதங்கண்
மருவுந் திறஞ்சொன் மயிலை மலைவிளக்கோ. (உகூ)

சுத்தசித்த மோடுபிர சித்தமெனத் தோன்றுபுபா
சத்தமுத்த மாக்குபிர சாதமரு ளையகனே. (௩௦)

அங்கலிங்க சத்திபத்தி யத்தமுகவர்ப்பிதசே
டங்களிவை யட்ட சயிலமெனச் சொன்னானே. (௩க)

குசித்த மழிந்து குடும்பநோய் மாற்றுஞ்
சுசித்தமதி லாசாரந் தோன்றுமெனச் சொன்னானே. (௩உ)

குபுத்தி யழிந்து குருநெறியி னிற்குஞ்
சுபுத்திதனி னிற்குஞ் சுடர்குருவிங் கென்றானே. (௩௩)

ஆங்கார மில்லா நிராங்கார வத்தமதி
னீங்கா திலகு நிகழ்த்துசிவ மென்றானே. (௩௪)

கமனமழிந்து கறையற்று நிற்குஞ்
சுமனமதி னின்றிலகுந் தூயசர மென்றானே. (௩௫)

மெய்ஞ்ஞான மாகி மிளிரும் பிரசாதஞ்
சுஞ்ஞான வத்தமதிற் றோன்றுமெனச் சொன்னானே. (௩௬)

துற்பாவ நீங்கித் துணிவுபடு மத்துவித
சற்பாவ மாலிங்கஞ் சாருமெனச் சொன்னானே. (௩௭)

ஆதார பீடங்க ளாறினுமவ் வாறிலிங்க
மீதாக வைத்து விளங்கச்செய் வித்தகனே. (௩அ)

ஆறு முகங்களுமவ் வாறுசா தாக்கியமு
மாறு வருணமுமா மாறிலிங்க மென்றாளே. (௩௯)

பத்தொடு மாயேசன் பார்ப்பரிய வாசார
மெய்த்தகுரு நான்கும் விளங்குகுரு வென்றாளே. (௪௦)

பிரசா தியுமப் பிராணலிங்கி தானு
முரைசால் சிவசரமு மோங்கிலிங்க மென்றாளே. (௪௧)

ஒழிந்தவங்க லிங்க மொருநான்கு நம்பா
லெழுந்தருளுஞ் சங்கமமென் றின்பந் தருவாளே. (௪௨)

உருவ முருவருவ முற்றறிதற் கெட்டா
வருவமென நின்றிடுமவ் வாறுமெனச் சொன்னாளே. (௪௩)

மாசுதரு தூலாதி மானவிசு வாதியே
யாசி றியாகாங்க மாதியா மென்றாளே. (௪௪)

விரிந்தன வெலாமும் விரிந்தமுறை சென்றே
யொருங்கியங்க லிங்க வுபயமா மென்றாளே. (௪௫)

கடத்தி னுபாதியா காயமுற்ற வாபோ
லடுத்த வுபாதியா லங்கலிங்க மென்றாளே. (௪௬)

தங்கு மிலிங்கமாந் தற்பதமத் தொம்பதமே
யங்க மயிக்கிய மசிபதமென் றுண்டாளே. (௪௭)

ஆக முயிர்தூரிய னுய்நின்ற போதமைத்தான்
சோகமனத் தானகத் தோன்றும் பெருமாளே. (௪௮)

அமைத்தபாஞ் சுத்தத் தசுத்தமதிற் சிவன்
றமப்பகுதி யிற்றோன் றாந் தத்துவங்க ளென்றாளே. (௪௯)

